தாயிடமிருந்து மகளுக்கு வரும்
உட்வர்ட்ஸ் அறிவுரை

## உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன்
## குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

கிரைப் வாட்டர்

தலைமுறை தலைமுறையாக புத்திசாலித் தாய்மார்கள் தங்கள்
குழந்தைகளுக்குக் கொடுத்து வருவது உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர்.
குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புக் கோளாறுகள்
ஆகியவற்றுக்கு உடனடி நிவாரணம் தருவது உட்வர்ட்ஸ்.

காத்துக் கொள்வீர்
கண்டிப்புடனே.
எப்போதும் ஒரு புட்டி
உங்கள் கைவசமிருக்கட்டும்




உட்வர்ஸ் கிரைப் வாட்டர்
நூறு ஆண்டுகளுக்கு மேலாக
புத்திசாலித் தாய்மார்களால்
உபயோகிக்கப் பட்டு வருகிறது!

**உங்கள் வதனம் மலரிதழ் மென்மையும் இளமையின் பொலிவும் பெற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்**




உங்கள் சருமத்தில் இயற்கையாக இருக்கிறது ஈரத்தன்மை. அதைப் பாதுகாக்கிறது பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமிலுள்ள விசேஷ 'ஹியுமெக்டண்ட்'. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் மென்மையும், மிருதுத்தன்மையும் இளமையும் அளிக்கின்றது. தூசு, சீதோஷ்ண மாறுதல் ஆகியவற்றில் இருந்து உங்கள் சருமத்தை பாதுகாக்கின்றது. வெண்பனி போன்ற லேசான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை தனியாகவும் உபயோகிக்கலாம்; முகப்பவுடருக்கும் படிமானமாகவும் உபயோகிக்கலாம். அப்போது ஒப்பனையும் மணிக்கணக்கில் கலையாமல் கவர்ச்சியாக விளங்கும்.

சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ். ஏயில் இணைக்கப்பெற்றது)

**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்-
பவுடர் பூச்சிற்குத் தலைசிறந்த ஓர் படிமானம்**

P-4932A Rev

# காத்திருந்தால்-காலந்தவறி விடும்!
# முந்துங்கள், சேருங்கள்!

பார்லே
## க்ளுகோ
## வர்ணப்போட்டி
12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு
## ரூ 5,000 பரிசுகள்

4 முதல் பரிசுகள்: தலா ரூ. 2,500
16 இரண்டாம் பரிசுகள்: தலா ரூ. 1,000
100 மூன்றாம் பரிசுகள்: தலா ரூ. 200
500 ஆறுதல் பரிசுகள்

ஆயிரக்கணக்கான நுழைவுப் பத்திரங்கள் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன—அரிய வாய்ப்பை தவறவிடாதீர்கள். பார்லே விற்பனையாளரிடம் நுழைவுப்பத்திரத்தைப் பெற்று அதிலுள்ள படத்திற்கு வர்ணம் தீட்டி அதை பார்லே க்ளுகோ பிஸ்கெட் உறையுடன் சேர்த்து அனுப்புங்கள்.

**நுழைவுக் கட்டணம் இல்லை.**

இன்றே வாங்குவீர், பார்லே க்ளுகோ
போட்டியில் இன்றே கலந்துகொள்ளுங்கள்.

போட்டி முடிவு தேதி 30 செப்டம்பர் 1969

PARLE Gluco BISCUITS

# உங்கள் குழந்தையின் வளர்ச்சிவேகத்திலே பரிபூரணமான திருப்தி காண்கிறீர்களா?

**சுயேச்சையான டாக்டர்கள் தரும் இந்த அறிக்கையைப் படியுங்கள்**

'எல்லாக் குழந்தைகளுக்கும் லீவர்ஸ் குழந்தை உணவு தரப்பட்டது...நம்மவர் குழந்தைகள் ஐரோப்பிய, அமெரிக்கக் குழந்தை-களுக்கு ஈடான வளர்ச்சியை நிரூபித்தன... 5-6 மாதங்களிலே எடை இரு மடங்குக்கு மேலாகியது, ஒரு வயதிற்குள் மும் மடங்கை மிஞ்சிவிட்டது.

பாரத நாட்டுக் குழந்தைகளுக்-கென்றே ஆக்கம்பெற்றது லீவர்ஸ் குழந்தை உணவு.

* அறிக்கையின் ஒரு பகுதியே இது. முழு அறிக்கையின் இலவசப் பிரதிக்கு எழுதுங்கள் : நியூ ஃபுட்ஸ், இந்துஸ்தான் லீவர் லிமிடெட்., போஸ்ட் பாக்ஸ் 995, பம்பாய்-1.




## லீவர்ஸ் குழந்தை உணவு

தலைசிறந்த டாக்டர்களால் தகுதி நிரூபணம் பெற்ற பாலுணவு

லின்டாஸ்-LF.14-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு



கல்கி

பொருளடக்கம்



சௌமிய, ஆவணி 22 - 1969 செப்டம்பர், 7



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே




பாலுக்குக் காவல் பூனையாம்!








தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 29 ★ இதழ் 6

# தொழில் அதிபர்களுக்கு வேண்டுகோள்!

சில ஆண்டுகளுக்கு முன் திரு டி. டி. கிருஷ்ணமாச்சாரியை அவரது தாம்பரம் வீட்டில் கண்டேன். அப்பொழுது அவர் என்னிடம் பின்வருமாறு சொன்னார்: "இந்தத் தொழில் அதிபர்களுடன் நீங்கள் எப்படிச் சேர்ந்து இருக்க முடிகிறது? அவர்களை நான் முற்றிலும் நன்கு அறிவேன். முப்பது வருடப் பழக்கத்தில் உங்கள் மனநிலையை நான் நன்கு அறிந்து கொண்டிருக்கிறேன். இந்த மனிதர்களின் குணத்துக்கும் உங்கள் தன்மைக்கும் பொருத்தம் இருக்க முடியாது." அவர் கூறியது உண்மையே. பிரச்னையின் ஒரே அம்சத்தை எடுத்துக் கொண்டால் கேள்விக்குப் பதில் சொல்வது சுலபம். ஆனால் பல அம்சங்களைச் சேர்த்துக் கவனிக்கையில் பதில் கூறுவது சுலபம் அல்ல.

அரசுடைமைக் கோட்பாட்டின் மூலம் தேசத்தில் பொருள் உற்பத்தியை அதிகப்படுத்த முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தால், என் அரசியல் மனப்பான்மை இப்போது இருப்பதை விட மாறுபட்டு இருந்திருக்கும். தொழில் அமைப்புக்களைச் சர்க்கார் நிர்வகிப்பது நல்லது என்ற நம்பிக்கை இருந்தால் அரசுடைமைக் கோட்பாட்டை நான் அணுகும் விதமே வேறாக இருக்கும். ஆனால் அந்தக் கோட்பாடு தேசத்தின் ஆன்மாவைப் பழுதுபடுத்துவதுடன், விரைவில் உற்பத்தி உயர்வு காண்பதற்கும் இடையூறாக இருக்கும் என்பது என் திட நம்பிக்கை.

சமூக நல இலக்குகளை அடைய வேண்டுமாயின் அதன் முதல் தேவை உற்பத்திப் பெருக்குதான். இது பள்ளிச் சிறுவர்களுக்கும் தெரியும். ஆனால் காங்கிரஸ் மேலிடத்திலுள்ள அரசுடைமைவாதிகளுக்கும், அரை குறை கம்யூனிஸ்டுகளுக்கும் இன்னும் இது தெரியவில்லை. எதைச் செய்தாவது குழப்பத்தை விளைவிக்க வேண்டும் என்ற நோக்கமுடையவர்களைப் பற்றி இங்கே நாம் கவனிக்க வேண்டியதில்லை.

லாபம் கிடைக்கும் என்கிற ஆசைதான் முதலீடு செய்வதற்கு ஊக்கம் தருகிறது. பொருட்களின் சேகரம், நல்ல நிர்வாகம் ஆகியவை தனிப்பட்டவர்களின் பிரத்தியேகமான முயற்சியின் மூலம் சிறப்பு அடைகின்றன. இவை இல்லாமலே தேசத்தின் பொருள் உற்பத்தியை நம்மால் அதிகப்படுத்த முடிந்தால், முதலீடு செய்கிறவர்களும், தொழிலதிபர்களும் எக்கதி ஆனாலும் சரி என்று கருதி, கவலைப்படாமல் இருந்து விடுவேன். அவர்களது அக்கிரமச் செயல்களை நான் அறிவேன். ஆளும் கட்சிக்கும், கம்யூனிஸ்டுகளுக்கும் தெரிந்தும் தெரியாமலும் அவர்கள் லஞ்சம் கொடுக்கிறார்கள். அவர்களை ஒதுக்கி அவர்களுக்காக வாதிடுவதையும் நிறுத்துவதற்கு இவையே போதும். ஆனால் மூலதனமும், பரவலான முறையில் திறமையாக நடைபெறுகின்ற நிர்வாகமும் தேசத்தின் செல்வ உற்பத்தி பெருகுவதற்கு அவசியம் என்று பொருளாதார விதிமுறை கூறுகிறது. எனவே தனியார் முயற்சிக்கு ஊக்கம் அளிக்குமாறு கேட்கத்தான் வேண்டியிருக்கிறது. ஏகபோகங்களின் கேடுகளைத் தவிர்ப்பதற்கு விலங்கமில்லாத போட்டி இருக்க வேண்டுமென்று வற்புறுத்த வேண்டியிருக்கிறது. கொள்கைகளுக்கும் கோட்பாடுகளுக்குமாகத் தொழில் அதிபர்கள் நேரடியாகப் போரிடுவதில்லை. அதைவிட, தங்கள் பகைவர்களுக்கு லஞ்சம் அளிப்பதில் அதிகம் நாட்டம் உடையவராக இருக்கின்றனர். இது எனக்கு அருவருப்பைத் தருகிறது. எனினும் அவர்களுக்காக வாதிடுபவன் போல் தென்படும் நிர்ப்பந்தம் எனக்கு ஏற்பட்டு உள்ளது.

தேசத்தில் எல்லா மட்டங்களிலும் அறச் சிதைவு ஏற்பட்டுள்ளது. கடவுளைத் தவிர வேறு எவரையும் நம்பிப் பயனில்லை. மக்களின் மனத்தை மாற்றி, பலவீனத்தை வலிமையாகவும், குறுகிய அகத்தையைத் துணிவுடன்கூடிய விவேக

மாகவும் மாற்றக் கூடிய தலைவர்களைத் தோற்றுவிக்க ஆண்டவன் ஒருவனாலேயே முடியும்.

லஞ்சம் கொடுப்பதால் பகைவனின் தாகம் தணிவதில்லை. அது மேலும் வளரவே செய்கிறது. அரசியல் அமைப்பின் வரம்புக்கு உட்பட்டு, பார்லிமெண்டின் மூலம் பகைவனுடன் நேரிடையாகப் போரில் ஈடுபட வேண்டும். அதற்கு வேண்டிய தைரியமும் தியாகமும்தான் தேவை. நல்லறிவும், தைரியமும் பயனற்றுப் போய், சட்ட ரீதியான போராட்டத்துக்குப் போதிய உதவி கிடைக்காமல் போனால், காங்கிரஸ் அதிக வேகத்தில் தவறுகளை இழைத்துக் கொண்டு தான் போகும். அதிகார பீடத்தில் அமர்ந்திருப்பவர்கள் கம்யூனிஸத்திடம் சரணாகதி அடைவர். சோஷலிஸ்ட் அமைப்பில் அரசுடைமைக் கோட்பாடு அத்தியாவசியமான அம்சம் என்று மதிக்கப் பெறும்.

அடுத்தாற்போல் நிகழவிருப்பதைத் தடுக்க முடியாது. 'கட்சிச் சார்பில்லாமல், நடுநிலைமை வகிக்கின்ற அதிகாரிகளைக் கொண்ட அமைப்பு கூடாது. அதற்குப் பதிலாக ஒரு புது வகை அதிகார வர்க்கம் ஏற்பட வேண்டும்' என்று தீவிரவாதிகள் கேட்பர். அந்தப் புதுவகையினர், அரசுடைமைக் கோட்பாட்டினர், இடதுசாரியினர், கம்யூனிஸ்டுகள் அல்லது வேறு எந்தப் பெயராலும் அழைக்கப் படலாம். இதற்கு இசைவு கூறிவிட்டால் அதுவே இந்தியாவில் கம்யூனிஸத்தின் வெற்றி ஆகிவிடும்.

பேராபாயம் காத்துக் கொண்டிருக்கிறது. சுயநலத்துக்காக லஞ்சம் கொடுப்பதைத் தொழில் அதிபர்கள் நிறுத்திவிட்டு அரசுடைமைக் கோட்பாட்டை எதிர்ப்போருடன் வெளிப்படையாகவே சேர வேண்டும். காங்கிரஸ் சொல்கின்ற சோஷலிஸத்துக்கு அரசுடைமைக் கோட்பாடுதான் மையமாக இருந்து வருகிறது. அரசுடைமைக் கோட்பாட்டைக் காந்திஜி கண்டித்தார். எனவே சோஷலிஸ்டுகள் உருவாக்கிய சோஷலிஸச் செயல்முறையையும் எதிர்த்தார். தொழில் அதிபர்களின் சொந்த நலன் பாதிக்கப்படுமே என்பதற்காக காந்திஜி எதிர்த்தார் என்று கருதுவது தவறு. சோஷலிஸத்தின் கீழ் மக்கள் அடிமை நிலைக்குத் தாழ்த்தப்பட்டு விடுவர்; தேசத்தின் பொருள் உற்பத்தி பாதகம் அடையும் என்னும் காரணத்துக்காகவே எதிர்த்தார்.

(ராஜாஜி ''ஸ்வராஜ்யா''வில் எழுதியது.)

# ராஜாஜியின் கருத்துக்கள்

சர்வாதிகார ஏகாதிபத்திய திசையில் பிரதமர் எடுக்க வேண்டிய அடுத்த நடவடிக்கை காங்கிரஸின் தலைமையைக் கைப்பற்றுவதே ஆகும். 'ஐக்கியம்' என்கிற கோஷத்தைக் கிளப்பிக் கொண்டு ஸ்ரீ நிஜலிங்கப்பாவைப் பதவியிலிருந்து நீக்குவதே இந்த நடவடிக்கை. பலவித நெரிசல்களால் அயர்வுற்றுக் கவலைக்குள்ளாகி யிருக்கும் நிஜலிங்கப்பா இதற்கு இணங்கிவிடலாம், அல்லது பெயரளவில் சிறிது எதிர்ப்புத் தெரிவிக்கலாம்.

''ஐக்கியம்'' என்ற கோஷம் பல பாவங்களைப் பூசி மெழுகிவிடும். இதுவரை பிரதமரைக் கண்டித்த பத்திரிகைகளில் சிலவும் தலைமையில் 'ஐக்கியம்' உண்டாவதற்காக எடுக்கப்படும் விவேகமான முடிவு இது என்று புகழக்கூடும்.

★

தொழில் துறைக்குத் தேவைப்படும் கச்சாப் பொருள்களின் இறக்குமதியை இந்திய சர்க்கார் மேற்கொள்வது வருந்தத்தக்கது. சர்க்கார் வர்த்தகக் கார்ப்பரேஷன் செயல்படும் விதத்தைப் பார்த்தால், புது இனங்கள் அரசாங்கத்தின் கையில் வருவதை வரவேற்பதற்கில்லை. உற்பத்தியாளர்கள் இறக்குமதி செய்தபோதிருந்ததை விட, கார்ப்பரேஷன் பொறுப்பேற்றபின் பல பண்டங்களின் விலை இரு மடங்காகவும் மும்மடங்காகவும் உயர்ந்துள்ளன. இதில் அரசியல் செல்வாக்கு துஷ்பிரயோகமாகக் கூடுமென்று குறிப்பிடும் இந்தியன் எக்ஸ்பிரஸ், ''தனியார் வியாபாரத்தில் ஏகபோக்கியம் தீமையானது எனில், சர்க்கார் துறையில் ஏகபோக்கியம் அதனினும் மிகவும் தீமையாகும். தனியார் ஏகபோக்கியத்தால் பாதிக்கப்படுவோர் சர்க்காரிடம் பரிகாரம் தேட முடியும். சர்க்கார் ஏகபோக்கியத்தால் பாதிக்கப்படுவோருக்கோ பரிகாரத்துக்கு இடமே இல்லை'' என்கிறது.

தொழில் துறைத் தேவைகளை இறக்குமதி செய்யத் தொழில் நுணுக்க அறிவு அவசியம். உரிய இடத்திலிருந்து, உரிய விலைக்கு, உரிய பொருளைத் தருவிப்பதில் சர்க்கார் நிறுவனத்துக்குத் திறமை போதாது.

ஆளும் கட்சிக்குத் தொழிலதிபர்களின் மீதுள்ள அதிகாரத்தை உயர்த்தவே இந்த ஏற்பாடு எனில், உண்மையில் அத்திசையில் இது ஒரு சக்தி வாய்ந்த நடவடிக்கையாகவே அமையும்.

★

தனது கொள்கைகள் ஏழைகளின் மேம்பாட்டையே நோக்கமாகக் கொண்டவை என்று பிரதமர் கூறுவது அபத்தம். பாங்குகள் அரசுடைமை ஆவதை எதிர்ப்போர் சீர்கேடான ஆட்சியில் அக்கறை உடையவர்கள் என்று அவர் கூறுவதும் பொருளற்றது.

அரசியல் அதிகார வேட்டையில் கையாளும் தேர்தல் தந்திரங்களின் மூலம் இந்தியாவுக்கு ஒருகாலும் கதிமோட்சம் கிடைக்காது. நெடுநாளைக்குப் பொருளாதார ஸ்திரத் தன்மை வேண்டும் என்று கூறுவோர் சுயநலக்காரர்கள் என்று சொல்லி, அப்பாவிகளான வோட்டர்களை ஏமாற்றுகிறார்கள். பிரதம மந்திரியின் அரசுடைமைக் கோட்பாடுகளை எதிர்ப்பவர்களுக்கு ஒரே ஒரு அக்கறைதான் உண்டு. அதுதான் கோடிக் கணக்கான இந்தத் தேச மக்களின் நல்வாழ்வு. மக்களது சுதந்திரமான வாழ்க்கையை அரசுடைமைக் கோட்பாடு அச்சுறுத்துகிறது. அவ்வாழ்க்கை வழியைக் காப்பாற்றுவதிலும் அவர்களுக்கு அக்கறை உண்டு.

# கலை உலகின் பெரு நஷ்டம்

உழைப்புக்கு உருவகமாக, ஊக்கத்துக்கு இலக்கியமாக, விடாமுயற்சிக்கு வடிவமாக விளங்கி வந்த எஸ். எஸ். வாஸன் அவர்கள் மறைந்து விட்டார். அதிசாமானிய நிலையிலிருந்து மேலும் மேலும் உயர்ந்து இரு மாபெரும் நிறுவனங்களின் தலைவராக — ஆனந்த விகடன், ஜெமினி அதிபராக—அவர் பரிணமித்தது, ராஜாஜி குறிப்பிட்டதுபோல், ''வெற்றி பெறும் முயற்சிக்கும், செயற்றுணிவுக்கும் ஓர் உதாரணமாகும்.''

பத்திரிகை உலகமும் திரை உலகமும் அடைந்துள்ள பேரிழப்பு இது. தமிழ் நாட்டில் சஞ்சிகை சகாப்தத்துக்கு முழு வடிவில் அடிகோலிய முதற் பத்திரிகை விகடன். வட நாட்டிலும் வெளி நாடுகளிலும் கூட நமது திரைப்படக் கலைக்குப் புகழ் ஈட்டித் தருவது ஜெமினி. இவை வாஸனுக்கு நினைவுச் சின்னமாக விளங்குவதோடு, திருவினையாளர்க்கும் முயற்சிக்கும் உருவமாக விளங்கி வரும்.

பெரிய அளவில் திட்டமிட்டு, அதற்காகவே அல்லும் பகலும் உடல் பொருள் ஆவியை ஈடுபடுத்தி, வெற்றியும் காண்பதில் வாஸன் அவர்கள் ஓர் ஆதரிச புருஷராக விளங்கினர். பல்லாண்டுகளுக்கு முன்பே ஆயிரம் ரூபாய், பத்தாயிரம் ரூபாய் என்று இலக்கியப் பரிசுகள் வைத்தவர் அவர். சந்திரலேகா, அவ்வையார் படங்களுக்கு லட்சக் கணக்கில் செலவிட்டதோடு அவற்றை விளம்பரப்படுத்திய விதத்திலும் மக்களை வியக்க வைத்தவர் அவர். கஸ்தூரிபா நிதிக்கு ரூ. 25,000, காந்திஜி நினைவு நிதிக்கு லட்சம் ரூபாய் — என்றிப்படி வாரி வழங்கினர். உலகத் தமிழ் விழாவின்போது நடைபெற்ற பிரம்மாண்டமான ஊர்வலத்துக்கு உயிர்நாடியாக விளங்கியவரும் அவரே.

ஆதியிலிருந்தே காங்கிரஸில் ஈடுபாடு கொண்டிருந்த அவர் சுதந்திர பாரதத்தில் பத்மபூஷணரானதும், ராஜ்ய சபை அங்கத்தினராக இறுதி நாட்களில் இடம் பெற்றிருந்ததும் பொருத்தமே. தமிழ் நாட்டின் தேச பக்தி, இலக்கியப் பற்று, இசையறிவு, கலையுணர்வு இவை வளருவதற்கு விகடன்—ஜெமினி மூலம் அவர் புரிந்துள்ள பணி குறிப்பிடத்தக்கது. நமது கலைப் பூங்காவனத்தில் நறுமணம் பரப்பி வந்த ஒரு வாச மலர் இன்று வாடிவிட்டது.

கல்கிப் பத்திரிகைக்கு வாஸன் அவர்களுடன் தனித்ததொரு சொந்தம் உண்டு. பேராசிரியர் 'கல்கி' அவர்களும் சதாசிவம் அவர்களும் ஆதிகாலத்தில் விகடனில் இதய பூர்வமாகச் சிறப்புப் பணியாற்றியவர்கள். 'கல்கி'ப் பத்திரிகை வெள்ளிவிழாக் கொண்டாடியபோது, இந்தப் பழைய பந்தத்தையும் இதற்காகத் தாம் பட்டுள்ள நன்றிக் கடனையும் உணர்ச்சியுடன் குறிப்பிட்ட வாஸன் அவர்கள், ''தம்பி வீட்டுக் கலியாணத்தில் கலந்து கொள்வது போல் பெருமைப்படுகிறேன்'' என்று கூறியது இன்னும் செவியில் ஒலிக்கிறது. துரதிர்ஷ்டவசமாக இன்று கல்கிப் பத்திரிகைக் குடும்பம், தனது அண்ணன் வீட்டின் அருந் துயரத்தில் பங்கு கொள்ளும்படியாகி விட்டது. பிரிவுத் துயருக்கு ஆளாகிவிட்ட ஸ்ரீமதி வாஸனுக்கும், அவரது அருமைப் புதல்வருக்கும் புதல்விக்கும், மாப்பிள்ளைக்கும் நமது நெஞ்சார்ந்த அநுதாபங்களை அளிக்கிறோம்.



# இன்னிசைக்கு எண்பது

இன்றைய சாகித்தியகர்த்தர்களில் முதலிடம் பெறுபவர் யார் என்பதில் இரண்டாவது அபிப்பிராயத்துக்கு இடமே இல்லை. இசைச் சிறப்பு, மொழிச் சிறப்பு, உணர்ச்சிச் சிறப்பு மூன்றும் ஒருங்கே பொதிந்த இன் தமிழ்ப் பாடல்கள் ஐந்நூற்றுக்கு மேல் அளித்துள்ள பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களே இன்று கர்நாடக சங்கீத சாகித்திய கர்த்தர்களில் முடிமணியாகத் திகழ்கிறார். சங்கீதத் திரிமூர்த்தியரும், சுவாதித்திருநாளும், கோபாலகிருஷ்ண பாரதியும் மற்றும் இசை மகனீயர்களும் வகுத்துத் தந்த மாண்புமிகு மரபுக்குப் பூரண வழித்தோன்றலாக விளங்குபவர் ஸ்ரீ சிவன் அவர்கள்.



அறுபதாண்டுகளுக்கு மேலாகத் 'தமிழோடு இசை பாடல் மறந்தறியாத' சிவநேசச் செல்வராகத் தமிழகமெங்கிலும் பஜனை புரிந்து வந்திருக்கிறார் ஸ்ரீ சிவன். திருவையாறு சப்தஸ்தான உற்சவத்தில் ஏழு சிவத்தலங்களை வலம் வந்து இருபத்தெட்டு மணி நேரத்தில் பதினேழு மைல்கள் நடந்து பஜனை புரிவதென்பது சாதாரண விஷயமா? இந்த அசாதாரணமான காரியத்தை நாற்பத்தெட்டாண்டுகள் ஆற்றிய இசையடியார் ஸ்ரீ சிவன். தமது சிவபஜனைச் சிறப்பின் காரணமாகவே 'போலகம் ராமையா' என்ற இயற்பெயர் மறைந்து 'பாபநாசம் சிவன்' என்று புதுப் பெயர் கொண்டவர்.

கலைமகளின் கடாட்சத்தைப் போல் திருமகளின் கடாட்சம் அவருக்குக் கிட்டவில்லை தான். எனினும் தம் சம்பாத்தியத்தோடு, புதிதாக நிதியும் திரட்டிப் போலகம் சிவாலயத்துக்கும் திருக்குளத்துக்கும் 75 ஆயிரம் ரூபாய் செலவில் திருப்பணி செய்தவர் அவர்.

இசை மேடைகளிலும் வெள்ளித் திரையிலும் சிவனது பாடல்கள் தனிப் புகழ் படைத்தவை. சாகித்தியகர்த்தர் என்பதோடு அவரே சிறந்த வித்வானும் ஆவார். சங்கீத சிம்மமாக விளங்கிய கோனேரிராஜபுரம் வைத்தியநாதய்யரின் சீடராகிய அவர், பொங்கும் உணர்ச்சியுடன் இசைப்பதைக் கேட்டால் கல்லும் கரையும்.

தமிழிசையின் பெருமைக்கு உருவளிக்கும் பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களுக்கு இம்மாதம் 24ந் தேதி எண்பது பிராயம் பூர்த்தியாகிறது. இவ்விசைப் பெரியார் தமது முதிர்ந்த பருவத்தில் வருமானத்தைக் குறித்துச் சிந்தையில்லாமல் சௌகரியமாக வாழ்வதற்கு வகை செய்ய வேண்டியது இசையன்பர்களின் கடமையாகும். இந்த நன்னோக்கத்துடன் ஸ்ரீமதி ருக்மிணி தேவி, செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீநிவாசய்யர், முசிரி ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர், (கல்கி) ஸ்ரீ சதாசிவம், (ஹிந்து) ஸ்ரீ நரசிம்மன், ஸ்ரீ வி. எம்பெருமாள் செட்டி, ஸ்ரீ எஸ். ஓய். கிருஷ்ணசாமி ஆகியோர் ஒரு குழுவாக அமைந்து ஸ்ரீ சிவனுக்கு விழா எடுத்துப் பண முடிப்பு அளிக்க முடிவு செய்துள்ளனர். இசையன்பர்களும் சங்கீத ஸ்தாபனங்களும், இந்த நல்ல சந்தர்ப்பத்தில் ஒரு ரூபாயிலிருந்து நூறு ரூபாய்க்குள் நன்கொடை வழங்கிச் சங்கீதப் பிதாமகனின் ஆசி பெற வேணும்.

நிதி அனுப்ப வேண்டிய முகவரி: **ஸ்ரீ சங்கர மேனன், காரியதரிசி, கலாக்ஷேத்திரம், திருவான்மியூர்**, சென்னை-41.

# அருணாவின் பயணம்

மைசூர் ராஜ்ய சுதந்திரக் கட்சியின் செயலாளரும் ஓய்வுபெற்ற அக்கௌண்டெண்ட் ஜெனரலுமான ஸ்ரீ வி. டி. சீனிவாசன் அவர்களுடைய புதல்வி அருணா, அமெரிக்காவில் சிகாகோ பல்கலைக் கழகத்தில் உதவி ஆசிரியைப் பணியை மேற்கொள்ளச் செல்லுகிறார். கூடவே அணு–விஞ்ஞானத்தில் டாக்டர் பட்டம் பெறவும் மேற்கொண்டு படிக்கப் போகிறார். அவர் பள்ளி இறுதி வகுப்பான எஸ்.எஸ்.எல்.சி.யிலிருந்து எம்.எஸ்ஸி. வரை ஒவ்வொரு பரீட்சையிலும் முதல் வகுப்பில் தேறி வந்திருக்கிறார். கல்வித் துறையில் புலமையும் திறமையும் காண்பிக்கும் மாணவ, மாணவியர்க்குப் பாரத சர்க்கார் உபகாரச் சம்பளம் அளித்து வருகிறது. அத்தகைய உபகாரச் சம்பளம் பெற்று எம். எஸ்ஸி. தேறியவர் குமாரி அருணா. அமெரிக்காவுக்குப் பயணமாகும் அவர், அங்கு தாம் ஏற்கும் பதவியில் காட்டும் அக்கறையினாலும் ஆராய்ச்சித் திறமையினாலும் தமக்குமட்டுமின்றித் தாய் நாட்டுக்கும் புகழ் தேடித் தர வாழ்த்துகிறோம்.



"ஓய் நாணு பாகவதரே! தியாகராஜர் சாரீரம் எப்படி?"

"மணியான சாரீரங்காணும்! இந்த வாரம் முழுதும் அது இப்படியே இருக்கணுங்கிறதுதான் என் கவலை."

"ஏங்காணும் தில்லேஸ்தானம்! ஜல்பேசனை எங்கே காணோம்?"

"ஜல்பேசன் தேனும்பேட்டை போயிருக்கிறார். வந்துடற நேரம்."

"சரபோஜி மகாராஜா காப்பி சாப்பிட்டுட்டாரா?"

"சரியாப்போச்சு! சரபோஜி மகாராஜா நேற்று ராத்திரியே பம்பாய்க்குப் போயிட்டாரே!... ரிசர்வ் பாங்க் சமாசாரமில்லையோ? நாளைக்கு மறுநாள் வந்துடுவார்!"

"இதோ மாம்பலம் போயிருந்த தியாகராஜர் வந்துட்டார்!"

* * *

தியாகராஜர் மீது நாணு பாகவதருக்கு இத்தனை அக்கறையா? சரபோஜி மகாராஜா ஏதாவது 'பி' ஃபாரத்துக்கு ரிசர்வ் பாங்குக்கு மனுப் போட்டிருக்கிறாரா?... திகைக்கிறீர்களா? வேறொன்றுமில்லை. சமீபத்தில் சென்னைக்கு 'மாதுங்கா டிராமாடிக் சொஸைட்டி' உறுப்பினர்கள் பம்பாயிலிருந்து வந்து, ஐந்து நாட்களில் வெவ்வேறு சபாக்களின் ஆதரவில் தங்கள் 'தியாகராஜர்' நாடகத்தை நடித்துக் காட்டினார்களே! அவர்கள் தங்கியிருந்த இடத்தில் ஒரு நாள் கேட்ட சம்பாஷணையின் பகுதிகள்தாம் மேலே குறிப்பிட்டவை.

# சென்னையில் 'திருவையாறு'!

நாணு பாகவதராக
— ஆர். சுவாமிநாதன்.

சரபோஜி மன்னராக
— ஆர். ஆர். ராவ்.

தியாகராஜராக
— எஸ். ஆர். கஸ்தூரி.







நான்கு ஆண்டுகளுக்கு முன்பே தங்கள் ஸ்தாபனத்தின் வெள்ளி விழாவைக் கொண்டாடிய 'மாதுங்கா டிராமாடிக் சொஸைட்டி' காலத்துக்கேற்பப் பலவித நாடகங்களை நடித்துக் காட்டி அனுபவம் பெற்றது. 1941ம் ஆண்டில் பல்வேறு துறைகளில் ஈடுபட்டிருந்த தமிழ் அன்பர்கள் ஒன்றுகூடி இந்த நிறுவனத்தின் சார்பில் நடித்த முதல் நாடகம் சுபத்திரா — அர்ஜுனா!

அதன் பிறகு தமிழக எழுத்தாளர்களிடமிருந்து அவ்வப்போது நாற்பத்து ஐந்துக்கும் மேற்பட்ட நாடகங்களை வாங்கிப் போய் எத்தனையோ தடவை பம்பாயிலும், பம்பாய்ச் சுற்றுப்புறங்களிலும், அகமதாபாத், நாக்பூர், கல்கத்தா முதலிய இடங்களிலும் சிறப்போடு நடித்துக் காண்பித்திருக்கிறார்கள். சென்னைக்கும் பத்து வருடங்களுக்கு முன் வந்து போனார்கள். அப்போது அவர்கள் பிரபலப்படுத்தியது கட்டபொம்மன்! வீரமும் ஆவேசமும் நிறைந்த நாடகம் அது. இப்போது அவர்கள் நடித்துக் காட்டியது 'தியாகராஜர்'. சாந்தமும் பக்தியும் ததும்பி ஓடும் நாடகம்.

"வி. வி. ஜெயராமன் அவர்களால் எழுதப்பட்ட 'தியாகராஜர்' நாடகத்தை அரங்கேற்ற முதலில் தயக்கமாகத்தான் இருந்தது. எத்

தனையோ பிரபல வித்வான்கள், விதுஷிகள் மூலம் பொதுமக்கள் செவிகளில் ஒலித்துப் பழக்கமாகி யிருக்கும் கீர்த்தனைகளை நன்றாகப் பாட வேண்டும். அத்துடன் இணைத்துப் பக்தி மயமான நடிப்பிலும் மனம் ஈடுபட வேண்டும். இது சாத்தியமா? என்ற கேள்வியை நாங்களே போட்டுக் கொண்டோம். எனக்கு ஓரளவு பாடத் தெரியும். ஆனால் தியாகராஜராக மேடையில் தோன்று மளவுக்கு மனோதிடம் வேண்டுமே! என் நடிக நண்பர்கள் இந்த நாடகத்தில் உற்சாகம் காண்பிக்கிறார்கள் என்று தெரிந்ததும் நான் பம்பாய் ஷண்முகானந்தா சபாவைச் சேர்ந்த ராமச்சந்திர பாகவதரை அணுகிச் சில காலம் சிக்ஷை பெற்றேன். பக்தி பூர்வமாகவும் பாவம் நிறைந்ததாகவும் தியாகராஜர் கிருதிகளைப் பாட அவர் எனக்கு மிகவும் உதவி செய்தார். நான் என் சாரீர, சங்கீதத் திறமையைக் காண்பிக்க இந்தப் பயிற்சி பெறவில்லை. கீர்த்தனைகளின் பொருளையும், பக்தி பாவத்தையும் புரிந்துகொள்ளத்தான் அவரிடம் பயிற்சி பெற்றேன். சுமார் முப்பது பாடல்களை வசனத்துடன், நடிப்பின் இடையே, சுருதி பிசகாமல் பாட என்னால் இயலுகிறது என்றால் அது அந்த ராமபிரான் அருள்தான்.

''அவகாசத்தை உத்தேசித்துப் பாதி கீர்த்தனைகளை அனுபல்லவியோடு நிறுத்திவிடுகிறேன். சில பாடல்களைத்தான் முழுதும் பாடுகிறேன். முதன் முதலாக நான்கு வருடங்களுக்கு முன் எங்கள் வெள்ளி விழாவின் போது அரங்கேறிய இந்த நாடகத்துக்கு நல்ல வரவேற்பு இருந்து வருகிறது.

'' 'டேப் ரிகார்டரை உபயோகப்படுத்தலாமே! மேடையில் பாடுவது சிரமமில்லையோ?' என்று கேட்கும் நண்பர்கள் சிலர் உண்டு. எனக்கு இந்த விஷயத்தில் நம்பிக்கை இல்லை. அனுபவித்துப் பாடினால்தான் முகத்தில் பாவத்தைக் கொண்டு வர முடியும் என்று நினைப்பவன் நான். அந்த பாவம் இல்லாவிடில், 'தியாகராஜர்' நாடகத்தை நடத்துவதில் அர்த்தமே யில்லை.''

இப்படிச் சொல்பவர், 'தியாகராஜரா'க மேடையில் தோன்றும் திரு எஸ். ஆர். கஸ்தூரி. 'ஹிந்துஸ்தான் ஷுகர் மில்ஸ்' ஸ்தாபனத்தின் பம்பாய் நிறுவனத்தில் உயர்ந்த பதவி வகிப்பவர். மற்றும் நாடகத்தில் பங்கு பெறும் நண்பர்கள் அனைவருமே பம்பாய் நகரில் பல்வேறு அலுவல்களில் ஈடுபட்டிருப்பவர்கள்.

வசனம் இன்னும் கூடச் சிறப்பாக அமைந்திருக்கலாமே என்ற எண்ணத்தாலும், அட்டைத் தம்புராவுடன் நாரதர் தோன்றும் போதும், பலமான மேக் அப்புடன் ராம லக்ஷ்மணர்களைப் பார்க்கும்போதும் கொஞ்சம் 'சப்'பென்றுதான் போய் விடுகிறது என்றாலும் நல்ல நடிப்பு ஈடு செய்கிறது.

இந்தத் 'தியாகராஜர்' நாடகத்தில் கலகலப்பைத் தோற்றுவிப்பவர் நாணு பாகவதராக நடிக்கும் ஆர். சுவாமிநாதன். மிடுக்கான நடிப்பு. ரசிகர்களின் கவனத்தைக் கவருகிறார். ஜல்போஜனாக வரும் வி. எஸ். கிருஷ்ணன் 'எடுப்பார் கைப்பிள்ளையாக' வெகு இயற்கையாக நடிக்கிறார். சரபோஜி மகாராஜாவாக மிக நன்றாக நடிக்கும் ஆர். ஆர். ராவுக்கு ரிசர்வ் பாங்கில் உத்தியோகம்.

இவர்கள் குழுவிலேயே நாடகம் எழுதி அதைத் தயாரிக்கும் முறையை இவர்கள் கையாளுவதில்லை. தமிழ் நாட்டிலிருந்துதான் பிரபலமாகும் நாடகங்களின் கையெழுத்துப் பிரதிகளை வாங்கிப் போகிறார்கள். அந்த நாடகங்கள் சென்னையில் எப்படி நடிக்கப்படுகின்றன என்று அவர்கள் முன்மாதிரி பார்ப்பதில்லை. தங்கள் சொந்தக் கற்பனையின் அடிப்படையிலேயே தங்கள் நடிப்பை அமைத்துக் கொள்ளுகிறார்கள்.

''இந்தத் தியாகராஜரையும் நாங்கள் அப்படித்தான் கற்பனை செய்திருக்கிறோம். இது சங்கீத தியாகராஜர் இல்லை. நாடகத் தியாகராஜர் இல்லை! பக்தித் தியாகராஜராகத்தான் உருவாக்கி யிருக்கிறோம். அதை உணர்ந்து கொண்டால் எங்களுக்கு வெற்றி'' என்றார் திரு எஸ். ஆர். கஸ்தூரி.

அந்த அளவில் நாடகம் நிச்சயம் வெற்றிதான் என்பதை நாமும் ஒப்புக் கொள்ளுகிறோம். வெற்றி இல்லையென்றால் எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர் தியாகராஜருக்கு ஸ்ரீ ராமர் பிரத்யட்சமானபோது ஏன் உணர்ச்சி வசப்பட்டு அழுதிருக்க வேண்டும்?

— பட்டினத்தார்







# திருந்தத் திருத்திய கை

எஸ். மகராஜன்

(செப்டம்பர் 4உ குற்றாலத்தில் ரசிகமணி நினைவு விழா)

“கவிஞனைப் பார்த்து, 'கவிதைக்கு இலக்கணம் கூறு' என்று கேட்பது எப்படி இருக்கிறதென்றால், பூனையைப் பார்த்து 'எலிக்கு இலக்கணம் கூறு' என்று கேட்ட கணக்குத் தான். எலியைக் கண்டால் பூனைக்கு எவ்வளவு கொண்டாட்டமோ, அவ்வளவு கொண்டாட்டமும் கவியைக் கண்டவுடன் கவிஞனாகிய எனக்கு ஏற்படுகிறது. ஆனால், எங்கள் இருவருக்குமே நாங்கள் அனுபவிக்கும் பொருளுக்கு இலக்கணம் கூறத் தெரியாது. என்றாலும் அப்பொருளை இனம் கண்டு கொள்ளத் தெரியும்'' என்று சொன்னார் ஓர் ஆங்கிலக் கவிஞர்.

எலியைக் கண்டவுடன் பூனைக்கும், கவிதையைக் கண்டவுடன் கவிஞனுக்கும் ஆர்வம் பொங்குகிறது, உள்ளம் உவக்கிறது, உரோமம் சிலிர்க்கிறது. இந்த நிகழ்ச்சிகளையும், மெய்ப்பாடுகளையும் கொண்டு தம் முன்னிருப்பது முறையோ எலி அல்லது கவிதை என்பதை இருவரும் எளிதில் ஊகித்துக் கொள்ளுகிறார்கள். ஆனால் அறிவியல் அடிப்படையில், இந்த ஊகத்துக்குக் காரணம் சொல்லுவது எளிதல்ல.

ரசிகமணியோ கவிதையின் உயிர்நிலையிருக்குமிடத்தை எப்படி எப்படியோ தொட்டுக் காட்டி விடுவார்கள். கவியோடு பல



1. ரசிகமணி.
2. டி. கே. சி. பேசுகிறார்.
3. இலக்கிய வட்டத்தில் ஒரு பகுதி: சதாசிவம், ராஜாஜி, கல்கி, டி. கே. சி.



வியாழ வட்டங்களாக உருண்டு புரண்டு. கவிதையை உள்ளுணர்வோடு ஊன்றிக் கவனித்த காரணத்தால் கவிஞனாலும் செயற்கரிய செயலை டி. கே. சி. செய்து காட்ட முடிந்தது.

கவியின் உயிர்நிலை அதன் வடிவத்தில்தான் இருக்கிறது, அதன் பொருளில் இல்லை என்பதை டி. கே. சி. அடிக்கடி வலியுறுத்தினார்கள். இந்த வடிவத்தை உருவாக்குவதும் உணர்ச்சியே, பொருள் அல்ல. ஓர் உண்மையான உணர்ச்சி ஒரு கவிஞனுடைய இதயத்தை ஆட்கொண்டு விட்டால், அவன் அதற்குமேல் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை; அவனுடைய தாய்மொழி அவனது இதயத்தில் பாய்ந்து, அந்த உணர்ச்சியை ஆவி சேர்த்துக் கட்டி, அதை ஒரு கவியாக உறைத்து விடுகிறது. கவிஞனுக்கும் கவிக்கும் இதற்கு மேல் சம்பந்தம் இல்லை என்றுகூடச் சொல்லிவிடலாம். உண்மையான, வளமான ஓர் உணர்ச்சியை அவன் பெற வேண்டும், அவ்வளவுதான்; பிறகு அவனது உள் மனம் அந்த உணர்ச்சிக்குக் கவி உருவம் கொடுத்து விடும். தேன் இறுகி, இறுகிக் கற்கண்டாவது போல, உணர்ச்சி இறுகி, இறுகிக் கவியாக வடிவெடுத்து விடும்.

கவிஞனுடைய உள் மனத்திலே அவன் கற்ற யாப்பிலக்கண அறிவு, மொழி அறிவு அனுபவ அறிவு — எல்லாம் படிந்து கிடக்கின்றன. உண்மை உணர்ச்சி இந்த அறிவை யெல்லாம், கவிஞனைக் கேட்காமலேயே, பயன்படுத்திக் கொண்டு, கவியுருவத்தை உண்டாக்குகிறது.

உரைநடையிலிருந்து கவிதையை வேறுபடுத்திக் காட்டுவது **ரிதம்** அல்லது தாளம். இந்தத் தாளம் தமிழ்க் கவிதையில் அமைவது போல் ஆங்கிலக் கவிதையில் அவ்வளவாக அமைவதில்லை என்று டி. கே. சி. கூறுவார்கள். தாளக் கருவிகளாய் அமைந்திருப்பவை எதுகையும் மோனையும். ஆங்கிலக் கவிதையில், அடியின் கடைசியிலேயே எதுகை வரும். தட்டுப் பொறியில் **(Type - writer)** ஒரு வரி முடியும்போது 'டிங்' என்று மணியடித்துவிடும். சொல் முடிந்து விட்டதா என்பதைப் பற்றி அந்த மணி கவலைப்படுவதில்லை. பாதிச் சொல்லை அடித்துக்கொண்டிருக்கும்போதே தாட்சண்யமில்லாமல் தட்டுப் பொறி 'டிங்' அடித்து விடும். சொல்லை முடிப்பதற்கு வேண்டிய மிச்சமிருக்கும் எழுத்துக்களை அடுத்த வரியில்தான் அடித்துத் தொலைக்க வேண்டும். அதைப் போலவே, ஆங்கிலக் கவியின் இறுதியில் வரும் எதுகை வசங்கெட்ட இடத்தில் 'டிங்' அடித்து, இயல்பான தாளத்தைக் கெடுப்பதாய் அமைந்து விடுகிறது. ஆனால், தமிழ்க் கவிதையிலோ, வரியின் தொடக்கத்திலேயே எதுகை அமைந்து விடுகிறது. இதன் காரணமாக ஆங்கிலக் கவிதையில் இல்லாத வசதி தமிழ்க் கவிதைக்குக் கிடைத்திருக்கிறது. இந்த வசதியை உளவறிந்து பயன்படுத்திய தமிழ்க் கவிஞர்கள் கம்பர் போன்ற வெகு சிலரே.

உதாரணமாகக் கீழ்க்கண்ட கம்பராமாயணப் பாடலை டி. கே. சி. அடிக்கடி எடுத்துச் சொல்லுவார்கள்:

**'கானாள நிலமகளைக்**
**கைவிட்டுப் போனவனைக்**
**காத்துப் பின்பு**

**போனானும் ஒருதம்பி,**
**போனவர்கள் வரும்அவதி**
**போயிற்றென் னா**

**ஆனாத உயிர்விட என்(று)**
**அமைவானும் ஒருதம்பி,-**
**அயலோரா னா(ர்)**

**யானாம்இவ் அரசாள்வென்!**
**என்னேஇவ் அரசாட்சி!**
**இனிதேஅம் மா!'**

பூனை பதி போட்டுப் பாய்வது போல, முந்தின வரியில் கவிதை பதி போட்டு, அடுத்த வரியிலுள்ள எதுகையில் பாயும்போது, உணர்ச்சிக்கு அதிக வேகமும் அழுத்தமும் ஏற்பட்டு விடுகிறது. இவ்வாறு எதுகையாலும் மோனையாலும் சொற்கட்டுகளாலும் ஏற்படும் 'ரிதம்' அல்லது தாளம் கவிதைக்கு உயிராக அமைந்திருக்கிறது என்று டி. கே. சி. விளக்குவார்கள்.

அலையில்லாது அமைதியாயிருக்கும் ஒரு குளத்தின் நீர்ப்பரப்பிலே ஒரு தட்டையான ஓட்டுச் சல்லியை வீசினால் அது தவளையைப் போலத் தத்தித் தத்திச் சென்று சுமார் ஐம்பது அடிக்கு அப்பால் தண்ணீருக்குள் மூழ்கிவிடும். அலை வீசிக் கொண்டிருக்கும் குளத்தில் ''தவளை'' விட்டால், 'தவளை' அலைமேல் சவாரி செய்து கொண்டே 150 அடி தூரம் கூடப் போகும். ஏன்? அலையின் உச்சியில் பட்டதும் வேகம் குறைந்த ஓட்டுக்குப் புது வேகத்தைக் கொடுக்கிறது அலை. ஓட்டுக்கு அலை புது வேகத்தைக் கொடுப்பது போல, தாளத்தோடு கூடிய எதுகையும் மோனையும் உணர்ச்சிக்குப் புது வேகத்தைக் கொடுக்கின்றன என்று டி. கே. சி. சொல்லுவார்கள்.....

ஆனால், கூர்ந்து கவனிப்பவர்களுக்கு மட்டுமே கவிதையில் தாளம் அல்லது **ரிதம்** செய்கிற வேலை என்ன என்பது புலப்படும். சென்னைப் பட்டணத்தையும், போலீஸ்காரர்களையும் பார்த்திராத ஒரு பத்தாம் பசலிப் பட்டிக்காட்டானைத் திடீரென்று சென்னை மவுண்ட்ரோடில் நிறுத்தி விட்டால், அவன் காணும் காட்சி அவனுக்கு எவ்வளவு திகைப்பாயிருக்கும்! ''கிழக்கும் மேற்குமாகவும், வடக்கும் தெற்குமாகவும் கார்களும் லாரிகளும் சாரி சாரியாகப் போய்க் கொண்டிருக்கும் ஒரு சந்தியிலே நின்று கொண்டு ஒருவன் கையை நீட்டுவதும், மடக்குவதுமாக இருக்கிறானே! என்ன பைத்தியக்காரத்தனம் இது!'' என்று எண்ணுவான் பட்டிக்காட்டான். ஆனால், நமக்குத் தெரியும், அந்த ஆள் போலீஸ்காரன் என்றும், அவன் அங்கு நின்று கொண்டு சமிக்கை காட்டாமலிருந்தால், காரோடு கார் மோதி, எத்தனையோ விபத்துக்கள் ஏற்பட்டுவிடும் என்றும்.

இதைப் போலவேதான், எதுகையும், மோனையும் கவிச் சந்திகளிலே நின்றுகொண்டு சொற்களை ஆண்டும், அடக்கியும், அவைகளுக்குத் தேவையான உணர்ச்சியையும் அழகையும் ஊட்டிக் கொண்டும் இருக்கின்

றன. அவைகள் இவ்வாறு அதிகாரம் செய்ய வில்லையென்றால், தாளம் தப்பிவிடும்; தாளம் தப்பினால், கவிக் களையே மிஞ்சும். இவ்வாறெல்லாம் டி. கே. சி. பல உதாரணங்கள் கொடுத்து விளக்கினாலும், கவியின் அந்தரங்கம் நமக்குப் பிடிபடுவதில்லை.

கவிநயம் குறைந்த பாடல் ஒன்று டி.கே.சி திருத்தியபின் எப்படிக் கவித்துவத்தால் நிறைந்து விடுகிறது என்பதற்கு ஓர் உதாரணம் காட்டினால், டி. கே. சி.யின் கருத்து தெளிவாகி விடும். சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன், ''செட்டி நாடு'' என்ற பத்திரிகையில் ஒரு வெண்பா வெளி வந்தது. இயற்றியவர் பெயர் வெளிவரவில்லை. வெண்பாவைப் படித்ததும், ''இதோ தமிழுக்கு ஒரு கவி கிடைத்து விட்டது!'' என்று டி. கே. சி. முழங்கினார்கள். முருகனைப் பற்றிய கவி அது.

கவியில் இரண்டு திருத்தங்கள் செய்தார்கள் ரசிகமணி. திருத்துவதற்கு முன் அப்பாடலின் உருவம் கீழ்க்கண்டவாறு:

மன்றல் கமழ்குழல்சேர்
வள்ளிக்கு வாய்த்தானை
வென்றி மயிலேறும்
வித்தகனை - ஒன்றின்
முளையானை, யாவர்க்கும்
மூத்தானை, யானைக்கு
இளையானை, நெஞ்சமே,
ஏத்து.

ரஸிகமணியின் திருத்திய கைபட்ட பிறகு பாடல் கீழ்க்கண்டவாறு திருத்தம் பெற்றது:

மன்றல்க் குழல் கமழும்
வள்ளிக்கு வாய்த்தவனை
வென்றி மயிலேறும்
வித்தகனை - ஒன்றின்
முளையானை, யாவர்க்கும்
மூத்தானை, யானைக்கு
இளையானை, நெஞ்சமே,
ஏத்து.

திருத்திய பாடல் தாள லயத்தில் சிறந்து நிற்கிறது என்பதை நாம் உணர்கிறோம். ஆனால், சிறப்புக்குக் காரணம் என்னவென்று நம்மால் சுட்டிக் காட்ட முடியவில்லை.

ஒரு கடிதத்தில் டி. கே. சி.யே காரணத்தை விளக்குகிறார்கள்:

''முதலடியில் பாடம் 'மன்றல் கமழ் குழல் சேர்' என்றிருந்தது. இதில் 'சேர்' என்ற வார்த்தை பிய்ந்த தொங்குகிற மாதிரி இருக்கிறது. 'வள்ளி'யோடு அங்கமாய்ப் பொருந்தவில்லை. 'குழல் கமழும் வள்ளி' என்று சொல்லும்போது, அங்கமாய்ப் பொருந்தி நிற்கிறது. இது ஒரு சிறு திருத்தந்தான்.

ஆனால்,

'வாய்த்தவனை' என்ற திருத்தந்தான் முக்கியமான திருத்தம். பத்திரிகையில், 'வாய்த்தானை' என்று இருக்கிறது. அது 'வித்தகனை' என்ற இரண்டாம் அடியில் வரும் இளக்கமான இலக்கணப் பாங்குக்கு மேலாய்ப் போய்விடுகிறது.

வாய்த்தவனை
வித் தகனை

இரண்டும் இளக்கமான நீண்டு செல்லும் ஓசை. ஆனால்,

முளையானை
மூத்தானை
இளையானை

என்னும் உருவங்கள் எழுத்துக் குறுகி, வேகத்தோடு ஒலிப்பன. இந்த வேகத்தைக் கெடுத்து விடுகிறது

'வாய்த்தானை'

என்று முதலடியில் வரும் வேகம் கொண்ட உருவம்; மூன்றாவது நான்காவது அடிகளில் வரும் அற்புதமான, பொருள் பொதிந்த வேகத்தைக் கெடுத்து விடுகிறது. கெடுக்காமல் இருப்பதற்காகவே திருத்தம்.

மறுபடியும் வெண்பாவைத் திருத்தத்துடன் சொல்லிப் பார்க்கலாம்.

மன்றல்க் குழல் கமழும்
வள்ளிக்கு வாய்த்தவனை
வென்றி மயிலேறும்
வித்தகனை - ஒன்றின்
முளையானை, யாவர்க்கும்
மூத்தானை, யானைக்கு
இளையானை, நெஞ்சமே,
ஏத்து.

[மன்றல் குழல்: புஷ்ப மாலை சூடிய கூந்தல்; ஒன்றின் முளையானை: அநாதியான வஸ்து; வேறொரு வஸ்துவிலிருந்து வராத தத்துவம்; யாவர்க்கும் மூத்தானை: அவனுக்கு முன் யாரும் இருந்ததில்லை.]

கவியில் விஷயம், வேகம், ஓசை எல்லாம் அமைந்திருக்கிறது.''

பாட்டின் வடிவினை முடியக் கண்டவர்கள் தான் முதலடியில் உள்ள ஓசை எவ்வாறு மூன்றாவது, நான்காவது அடிகளின் இங்கிதத்தையும் வேகத்தையும் கெடுக்கிறது என்று கண்டுகொள்ள முடியும்.

பாடலை வெறும் சொற் குப்பையாகப் பார்க்காமல், உயிர்த் துடிப்போடும் உணர்ச்சியோடும் நடனமாடும் ஒரு மங்கையாகக் கண்டார்கள் டி. கே. சி. ''அபிநயக் கலையில் கண்ணும் இதழும் கையும் காலும் எப்படி அங்கமாயிருந்து உணர்ச்சிகளைக் காட்டுகின்றனவோ, அப்படியே கவியிலுள்ள சீர், மோனை, எதுகை ஆகிய எல்லாம் அங்கங்களாக இருந்து உணர்ச்சிகளை எடுத்துக் காட்டுகின்றன. தமிழ்க் கவி என்றால் மேலே சொன்ன மாதிரி உணர்ச்சிகளை எடுத்துக் காட்ட வேண்டும். அப்படி உணர்ச்சிகளைக் காட்டாதபடி ஏதோ அலங்காரத்துக்காக எதுகை, மோனை, சீர்களை உபயோகப்படுத்தினால், அது கவியல்ல. அதனிடத்தில் உணர்ச்சியையோ, உண்மையையோ காணமுடியாது. பாவம் இல்லை, ரஸம் இல்லை என்று சொல்லி விட நேரும். ஏதோ சொல்லை வைத்து விளையாடிய வெறும் செய்யுளாகத்தான் இருக்கும். அவைகளை அனுபவிக்க முடியாது. அவைகளை வாசிப்பதெல்லாம் ஆயாசந்தான், தொந்தரவுதான்'' என்பதே ரஸிகமணியின் தெளிந்த முடிவு.

மாசற்ற காட்சி படைத்திருந்த காரணத்தாலும், கவிதையின் வளைவு நெளிவுகளையெல்லாம் நுண்ணறிவோடு பார்க்கும் திறம் பெற்றிருந்த காரணத்தாலும், செருகு கவிகளையும், போலிப் பாடல்களையும் உடனடியாகக் கண்டுபிடித்து, அவற்றை சவிரக்கமில்லாமல் களைந்தெறியும் துணிச்சல் ரஸிகமணியிடம் இருந்தது.



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் நாற்பத்தேழு

## பேய்ச் சிரிப்பு

இளவரசரும் பூங்குழலியும் யானை மீது ஏறிச் சென்ற பிறகு, பின் தங்கியவர்களுக்கு என்ன நேர்ந்தது என்பதை நாமும் நேயர்களுக்குச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம்.

''யானைக்கு மதம் பிடித்துவிட்டது!'' என்று சேநாதிபதி கூச்சலிட்டதைக் கேட்டு மற்றவர்களும் அப்படியே முதலில் நம்பினார்கள். யானையைப் பின்தொடர்ந்து குதிரைகளை வேகமாக விட்டுக் கொண்டு போகப் பார்த்தார்கள். ஆனால் அது இயலுகிற காரியமாயில்லை. 'யானை இறவு'த் துறையை அடைந்ததும் அவர்களுடைய பிரயாணம் தடைப்பட்டு விட்டது. வழக்கம் போல் எல்லாருக்கும் முதலில் சென்ற வந்தியத்தேவனுடைய குதிரை அக்கடல் துறையில் இறங்கிப் பாய்ந்து சேற்றில் அகப்பட்டுக் கொண்டது. மிக்க சிரமப்பட்டு

அதை வெளியேற்றினார்கள். ஆனாலும் குதிரை இனி பிரயாணத்துக்குத் தகுதியில்லை யென்று ஏற்பட்டது.

சேநாதிபதி பூதிவிக்கிரமகேசரி இன்னது செய்வதென்று தெரியாமல் தலையில் அடித்துக் கொண்டார். "என் வாழ்க்கையில் இம்மாதிரி தவறு செய்ததில்லை. எல்லாரும் சும்மா நிற்கிறீர்களே? என்ன செய்யலாம்? இளவரசரை எப்படிக் காப்பாற்றலாம்? யாருக்காவது யோசனை தோன்றினால் சொல்லுங்கள்!" என்றார். அப்போது ஆழ்வார்க்கடியான் முன்வந்து, "சேநாதிபதி! எனக்கு ஒன்று தோன்றுகிறது; சொல்லட்டுமா?" என்றான்.

"சொல்வதற்கு நல்ல வேளை பார்த்துக் கொண்டிருக்கிறாயா? சீக்கிரம் சொல்!" என்றார் சேநாதிபதி.

"இளவரசர் சென்ற யானைக்கு உண்மையில் மதம் பிடிக்கவில்லை..."

"என்ன உளறுகிறாய்? பின்னே யாருக்கு மதம் பிடித்தது? உனக்கா?"

"ஒருவருக்கும் மதம் பிடிக்கவில்லை தாங்கள் வேண்டுமென்று பிரயாணத்தைத் தாமதப்படுத்துகிறீர்கள் என்ற சந்தேகம் இளவரசருக்கு உண்டாகி விட்டது. அதனால் நம்மை விட்டுப் பிரிந்து போவதற்காக யானையை அப்படித் தூண்டிவிட்டு வேகமாகப் போய் விட்டார். யானையைப் பழக்கும் வித்தையின் சகல இரகசியங்களையும் அறிந்தவர் இளவரசர் என்பதுதான் நம் எல்லாருக்கும் தெரியுமே?"

இது உண்மையாயிருக்கும் என்று சேநாதிபதிக்கும் பட்டது. அவர் உள்ளம் சிறிது நிம்மதி அடைந்தது.

"சரி; அப்படியே யிருக்கட்டும். ஆனாலும் நாம் தொண்டைமானாற்றின் முகத்துவாரத்துக்குப் போய்ச் சேர வேண்டும் அல்லவா? அங்கே நடப்பது என்ன என்றாவது தெரிந்து கொள்ள வேண்டும் அல்லவா?"

"போக வேண்டியதுதான். கடற்கரையின் ஓரமாகச் சென்று எங்கேயாவது படகு கிடைத்தால் அதில் ஏறிக் கொண்டுதான் கடந்தாக வேண்டும். அல்லது பார்த்திபேந்திர பல்லவரின் கப்பல் வரும் வரையில் காத்திருக்கலாம்."



''வைஷ்ணவரே! நீர் பொல்லாதவர். இளவரசரிடம் இப்படி ஏதாவது சொல்லி விட்டீர் போலிருக்கிறது.''

''சேநாதிபதி! இந்தப் பிரயாணம் கிளம்பியதிலிருந்து நான் இளவரசருடன் பேசவே யில்லை.''

இதன் பிறகு அவர்கள் அந்தக் கடற்கழியின் ஓரமாகக் கிழக்கு நோக்கிச் சென்றார்கள்.

சென்ற அத்தியாயத்தில் வெளியாகியிருந்த படங்களிலிருந்து நேயர்கள் இலங்கைத் தீவின் வடபகுதியின் இயல்பை ஒருவாறு அறிந்திருக்கலாம். இலங்கையின் வடக்கு மூலைப் பகுதிக்கு அந்நாளில் நாகத்வீபம் என்று பெயர் வழங்கியது. அந்தப் பகுதியையும் இலங்கையின் மற்றப் பெரும் பகுதியையும் இருபுறத்திலிருந்தும் கடல் உட்புகுந்து பிரித்தது. ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்குச் செல்லும்படியாகக் கடற்கழி மிகக் குறுகியிருந்த இடத்துக்கு 'யானை இறவு'த் துறை என்று பெயர். சில சமயம் இத்துறையில் தண்ணீர் குறைவாயிருக்கும். அப்போது சுலபமாக இறங்கிக் கடந்து செல்லலாம். மற்றச் சமயங்களில் அதைக் கடப்பது எளிதன்று. படகுகளிலேதான் கடக்க வேண்டும்.*

* யானை மந்தைகள் இந்த இடத்தில் கடலில் இறங்கிக் கடந்து செல்வது வழக்கமானபடியால், 'யானை இறவு' என்று பெயர் வந்தது. முற்காலத்தில் இவ்விடத்தில் யானைகளைக் கப்பல்களில் ஏற்றி வெளிநாடு அனுப்பியதாகவும் சொல்லப்படுகிறது.



அந்தச் சமயத்தில் இலங்கைக் கடற்கரையோரமாக இருந்த படகுகள் எல்லாம் பெரும்பாலும் மாதோட்டத்துக்கும் திரிகோண மலைக்கும் சென்றிருந்தன. என்றாலும், தப்பித் தவறி எங்கேயாவது ஒன்றிரண்டு படகுகள் இருக்கலாம் என்று எண்ணிச் சேநாதிபதி முதலியவர்கள் பார்த்துக் கொண்டே சென்றார்கள். கடைசியாக மீன் பிடிக்கும் வலைஞனுடைய சிறிய படகு ஒன்று சிக்கியது. அதில் படகோட்டி ஒருவனே யிருந்தான். அவனும் முதலில் வரமாட்டேன் என்று தகராறு செய்தான். கேட்கிறவர் சோழ நாட்டுச் சேநாதிபதி என்று தெரிந்து கொண்டு சம்மதித்தான்.

படகில் ஏறிக் கடல் கால்வாயைக் கடந்தார்கள். ஆனால் பிறகு எப்படித் தொண்டைமானாற்றின் முகத்துவாரத்தை அடைவது? காட்டு வழியில் நடந்து போய்ச் சேர்வது சுலபமன்று. அதிக நேரமும் ஆகும். ஆகையால் அதே படகை உபயோகித்துக் கீழைக் கடற்கரையோரமாகவே சென்று தொண்டைமானாற்றின் சங்கமத்தை அடைவதென்று தீர்மானித்தார்கள்.

நள்ளிரவு வரையில் படகுக்காரன் கடலோரமாகப் படகு விட்டுக்கொண்டு சென்றான். அதற்குப் பிறகு அவன் களைத்து விட்டான். மற்றவர்கள் உதவி செய்வதாகச் சொல்லியும் பயனில்லை. "இனி அடிக்கடி திசை திரும்ப வேண்டும். மூலை முடுக்குகளும் கற்பாறைகளும் அதிகம். பாறையில் மோதினால் படகு உடைந்து சுக்குநூறாகிவிடும். இனி பொழுது விடிந்துதான் படகு செலுத்த முடியும்" என்றான். சேநாதிபதி முதலியவர்களும் களைப்படைந்து போயிருந்தார்கள். ஆகையால் கரையில் இறங்கித் தோப்பு ஒன்றில் படுத்தார்கள்.

வந்தியத் தேவனுக்கு இது ஒன்றும் பிடிக்கவில்லை. அவன் ஆழ்வார்க்கடியானோடு சண்டை பிடித்தான். "எல்லாம் உன்னாலே வந்த வினை!" என்றான்.

"என்னாலே என்ன இப்போ வந்தது?" என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

"நீ ஒன்றையும் மனம் விட்டுச் சொல்வதில்லை. கடம்பூரிலிருந்து நானும் பார்த்துக் கொண்டுதான் வருகிறேன். கொஞ்சம் சொல்வது போல் சொல்கிறாய்; பாதிச் செய்தியை இரகசியமாய் வைத்துக் கொள்கிறாய். இளவரசர் யானையின் மேல் ஏறியதன் நோக்கம் உனக்குத் தெரிந்திருக்கிறதே? அதை என்னிடம் முன்னமே சொல்லியிருந்தால் நானும் அந்த யானையின் மேல் ஏறியிருப்பேன் அல்லவா? இவ்வளவு கஷ்டப்பட்டுத் தேடிப் பிடித்த இளவரசரை இப்போது கை நழுவ விட்டு விட்டோமே? பழையாறைக்குப் போய் இளைய பிராட்டியிடம் என்ன சொல்வது?" என்றான் வந்தியத் தேவன்.

"ஓலையைக் கொடுத்ததும் உன் கடமை தீர்ந்து விட்டது. இன்னும் என்ன?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அதுதான் இல்லை. இளவரசரை இளைய பிராட்டியிடம் கொண்டு போய்ச் சேர்த்த பிறகுதான் என்னுடைய கடமை தீர்ந்ததாகும். நீயே அதற்குக் குறுக்கே நிற்பாய் போலிருக்கிறதே!"

"இல்லை, அப்பா, இல்லை! நான் குறுக்கே நிற்கவில்லை. நாளைக்கே நான் சேநாதிபதியிடம் விடைபெற்றுக் கொண்டு என் வழியே போகிறேன்!"

"உன் காரியம் முடிந்து விட்டது. இளவரசரைப் பிடித்துக் கொடுத்தாய் விட்டது என்று போகப் பார்க்கிறாயாக்கும். உன் பேரில் எனக்கு எப்போதுமே கொஞ்சம் சந்தேகம் இருந்தது. இப்போது அது உறுதியாகிறது."

இவ்விதம் அவர்கள் சிறிது நேரம் சண்டை பிடித்துக் கொண்டிருந்த பிறகு தூங்கிப் போனார்கள். நன்றாகக் களைத்திருந்தபடியால் அடித்துப்போட்டவர்களைப் போல் தூங்கினார்கள்.

**ப**லபலவென்று பொழுது விடியும் சமயத்தில் படகு வலிக்கும் சத்தம் கேட்டு ஆழ்வார்க்கடியான் முதலில் விழித்துக் கொண்டான். அவன் எதிரே தோன்றிய காட்சி அவனைத் திடுக்கிடச் செய்தது. கடலில் கொஞ்ச தூரத்துக் கப்பால் பாய்மரம் விரித்த மரக்கலம் ஒன்று நின்று கொண்டிருந்தது. அது பயணப்படுவதற்கு ஆயத்தமாக நின்றதாக நன்கு தெரிந்தது. அந்த மரக்கலத்தை நோக்கிக் கரையிலிருந்து ஒரு படகு போய்க் கொண்டிருந்தது. அதில் படகுக்காரனைத் தவிர மூன்று பேர் இருந்தார்கள். அந்தப் படகு முதல் நாள் மாலை தங்களை ஏற்றி வந்த படகுதான் என்று தெரிந்து கொள்ள ஆழ்வார்க்கடியானுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

அந்த மரக்கலம் எங்கிருந்து திடீரென்று வந்தது என்பதையும் அவன் விரைவிலேயே ஊகித்துக் கொண்டான். அவர்கள் படுத்திருந்த இடத்துக்குப் பக்கத்தில் கடல் பூமிக்குள் குடைந்து சென்றிருந்தது. மரங்கள் அந்த இடத்தை ஓரளவு மறைத்திருந்தன. அந்தக் குடாவிலேதான் அம்மரக்கலம் நின்றிருக்க வேண்டும். பொழுது விடிந்ததும் புறப்பட்டிருக்க வேண்டும்.

அந்த மரக்கலம் யாருடையது? எங்கிருந்து வந்தது? எங்கே போவது? படகு எதற்காகக் கப்பலை நோக்கிப் போகிறது? அதில் இருப்பவர்கள் யார்?

இவ்வளவு கேள்விகளும் ஆழ்வார்க்கடியானுடைய மனத்தில் மின்னலைப் போல் தோன்றி மறைந்தன.

"சேநாதிபதி! சேநாதிபதி! எழுந்திருங்கள்!" என்று கூவினான்.

சேநாதிபதியும் வந்தியத் தேவனும் மற்ற இரு வீரர்களும் திடுக்கிட்டு விழித்தெழுந்தார்கள்.

முதலில் கடலில் நின்ற பாய்மரக் கப்பல் அவர்கள் கண்ணில் தென்பட்டது.

சேநாதிபதி, "ஓ! அது சோழ நாட்டுக் கப்பல்தான். பழுவேட்டரையர்கள் அனுப்பிய கப்பலாகவே இருக்கலாம்! இளவரசர் ஒருவேளை அதில் போகிறாரோ, என்னமோ? ஐயோ! தூங்கிப் போய் விட்டோமே! என்ன பிசகு செய்தோம்!" என்றார்.

பிறகு, "படகு எங்கே? போய்க் கப்பலைப் பிடிக்க முடியுமா என்று பார்க்கலாம்!" என்றார்.

அதற்குள் படகு சென்று கொண்டிருப்பதும் அவர் கண்ணில் படவே, "அடேடே! அதோ போகிறது நாம் வந்த படகல்லவா? அதில் ஏறிப் போகிறவர்கள் யார்? அடே படகுக்காரா! நில் நில்!" என்று இரைந்தார்.

படகுக்காரனின் காதில் அது விழுந்ததோ என்னவோ தெரியாது. அவன் படகை நிறுத்தவில்லை. மேலே செலுத்திக்கொண்டு போனான்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டுமிருந்தான் வந்தியத்தேவன். "அந்தக் கப்பலில் இளவரசர் போகிறார்!" என்று சேநாதிபதி கூறியது அவன் செவி வழியாகப் புகுந்து மனத்தில் பதிந்தது. அதற்குப் பிறகு வேறு எந்த நினைவுக்கும் அவன் மனத்தில் இடமிருக்கவில்லை. அவன் செய்ய வேண்டியது என்னவென்பதைப் பற்றித் தான் ஏதேனும் சந்தேகம் உண்டா? அவன் கால்களுக்குக் கட்டளையிட வேண்டிய அவசியம்தான் உண்டா? இல்லவே இல்லை. அடுத்த நிமிஷத்தில் அவன் கடலில் பாய்ந்து இறங்கினான். அலைகளைத் தள்ளிக் கொண்டு அதிவேகமாகச் சென்றான். நல்ல வேளையாகக் கடலோரத்தில் அங்கே அதிகம் தண்ணீர் இல்லை. ஆகையால் அதி சீக்கிரத்தில் வெகு தூரம் போய்விட்டான். படகின் அருகிலும் சென்றுவிட்டான். தண்ணீரின் ஆழம் திடீரென்று அதிகமாகி விட்டது. தத்தளிக்கும் நிலைமை ஏற்பட்டது. "ஐயோ! நான் முழுகிச் சாகப் போகிறேன்! என்னைக் காப்பாற்றுங்கள்!" என்று கத்தினான். படகில் யாரோ சிரிக்கும் சத்தம் கேட்டது. பிறகு சிலர் பேசும் குரல்கள் கேட்டன. படகு நின்றது. படகுக்காரன் குனிந்து கை கொடுத்தான். வந்தியத்தேவன் படகில் ஏறி உட்கார்ந்தான். படகு மேலே சென்றது.

படகில் இருந்தவர்களை வந்தியத்தேவன் ஆராய்ந்து பார்த்தான். ஒருவன் தமிழ் நாட்டானே அல்ல. அரபு நாட்டான் போல் காணப்பட்டான். அவன் எப்படி இங்கு வந்தான் என்ற வியப்புடன் மற்ற இருவரையும் பார்த்தான். அவர்கள் முகத்தில் பாதியை மறைத்து முண்டாசு கட்டிக் கொண்டிருந்தார்கள். ஆனாலும் தமிழ் நாட்டவர்கள் என்று தெரிந்தது. அது மட்டுமன்று. பார்த்த முகங்களாகவும் காணப்பட்டன. எங்கே, எங்கே பார்த்தோம் இவர்களை? — ஆ! நினைவு வருகிறது! பார்த்திபேந்திர பல்லவனுடன் தம்பளையிலிருந்து திரும்பி வந்தவர்கள் அல்லவா இவர்கள்? ஆழ்வார்க்கடியான் இவர்களைத் தானே இளவரசரைக் கொல்ல வந்தவர்கள் என்று சொன்







னான்? ஓகோ! இவர்களில் ஒருவனை வேறோர் இடத்தில் கூடப் பார்த்திருக்கிறோமே? மந்திரவாதி ரவிதாஸன் அல்லவா இவன்? ஆந்தை கத்துவதுபோல் கத்திவிட்டுப் பழுவூர் ராணியைப் பார்க்க வந்தவன் அல்லவா இவன்? சரி, சரி! இளவரசர் கப்பலில் இருப்பது தெரிந்துதான் இவர்கள் அதில் ஏறிக்கொள்ளப் போகிறார்கள்! ஆகா! இளவரசர் போகும் வழியில், இது ஓர் அபாயமா? நாம் அவசரமாக ஓடி வந்து இந்தப் படகைப் பிடித்து ஏறியது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று?...

படகு போய்க்கொண்டிருந்தது. மரக்கலத்தை நெருங்கிக் கொண்டிருந்தது.

படகில் இருந்தவர்கள் மௌனம் சாதித்தார்கள். வந்தியத் தேவனால் மௌனத்தைப் பொறுக்க முடியவில்லை. பேச்சுக் கொடுத்துப் பார்க்க விரும்பினான்.

''நீங்கள் எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டான்.

''தெரியவில்லையா? அதோ நிற்கும் கப்பலுக்குப் போகிறோம்!'' என்றான் மந்திரவாதி. பாதி மூடியிருந்த வாயினால் அவன் பேசிய குரல் பேயின் குரலைப் போலிருந்தது.

''கப்பல் எங்கே போகிறது?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''அது கப்பலுக்குப் போன பிறகு தான் தெரிய வேண்டும்'' என்றான் ரவிதாஸன்.

மறுபடியும் படகில் மௌனம் குடிகொண்டது. வெளியில் கடலின் ஓங்கார நாதம் சூழ்ந்தது.

இப்போது மந்திரவாதி ரவிதாஸன் மௌனத்தைக் கலைத்தான். ''நீ எங்கே அப்பா போகிறாய்?'' என்று கேட்டான்.

''நானும் கப்பலுக்குத் தான் போகிறேன்'' என்றான் வந்தியத்தேவன்.

''கப்பலுக்குப் போய்ப் பிறகு எங்கே போவாய்?''

''அது கப்பலில் ஏறிய பிறகுதான் தெரிய வேண்டும்!'' என்று பாடத்தைத் திருப்பிப் படித்தான் வந்தியத்தேவன்.

**ப**டகு கப்பல் அருகில் சென்றது. மேலேயிருந்து ஓர் ஏணி கீழே இறங்கியது. அதில் ஒவ்வொருவராக ஏறிச் சென்றார்கள். ஏணி மேலே போவதற்குள் வந்தியத்தேவன் அதில் தொத்திக் கொண்டான். கப்பலின் மேல் தளத்தில் ஏதோ பேச்சு நடந்தது. அவனுக்குப் புரியாத பாஷையாகத் தொனித்தது. வந்தியத் தேவன் இன்னும் துரிதமாக ஏணியின் மீது ஏறிக் கப்பலின் தளத்தில் குதித்தான். குதித்த உடனே ''எங்கே இளவரசர்?'' என்று இரைந்து கொண்டு சுற்று முற்றும் பார்த்தான்.

சுற்றிலும் அவன் பார்த்த காட்சி அவனுடைய இரும்பு நெஞ்சத்தையும் சிறிது கலக்கி விட்டது. அவனைச் சுற்றிலும் பயங்கர ரூபமுள்ள அரபு நாட்டு மனிதர்கள் நின்றார்கள். ஒவ்வொருவனும் ஒரு ராட்சதனைப் போல் தோன்றினான். எல்லோரும் அவனை வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றார்கள். அவனுடைய கேள்விக்கு யாரும் பதில் சொல்லவில்லை.

''ஏதோ பெரிய தவறு செய்து விட்டோம்'' என்ற உணர்ச்சி வந்தியத்தேவன் உள்ளத்தில் உதித்தது. இது சோழ நாட்டுக் கப்பல் அல்ல; இருக்க முடியாது. இதில் உள்ளவர்கள் தமிழ் மானுமிகள் அல்ல. பெரிய பெரிய குதிரைகளை விற்பதற்காகக் கொண்டு வரும் அரபு நாட்டு மனிதர்கள்.

இந்தக் கப்பலில் இளவரசர் இருப்பது இயலாத காரியம். அவசரப்பட்டு வந்து ஏறிவிட்டோம். தப்பிச் செல்வது எப்படி? கப்பல் ஓரத்தில் நின்று குனிந்து

பார்த்தான். படகு போய்க் கொண்டிருந்தது. "படகுக்காரா! நிறுத்து!" என்று கூவிக் கொண்டு கடலில் குதிக்கப் போனான். அச்சமயம் ஒரு வஜ்ரத்தை நிகர்த்த கை பின்னலிருந்து அவனுடைய குரல்வளையைப் பிடித்தது. ஓர் இழுப்பு; ஒரு தள்ளு. வந்தியத்தேவன் கப்பல் தளத்தின் மத்தியில் வந்து விழுந்தான். அவனுக்கு உக்கிர ஆவேசம் வந்து விட்டது. குதித்து எழுந்து அவனைத் தள்ளியவனின் முகவாய்க்கட்டையில் ஓங்கி ஒரு குத்து விட்டான். அந்த ஆறு அடி உயரமுள்ள அராபியன் தனக்குப் பின்னால் நின்றவனையும் தள்ளிக் கொண்டு படார் என்று கீழே விழுந்தான்.



வந்தியத் தேவனுக்குப் பின்னால் பயங்கரமான உறுமல் சத்தம் கேட்டது. நல்ல சமயத்தில் திரும்பிப் பார்த்தான். இல்லாவிட்டால் அவன் முதுகில் கத்தி பாய்ந்திருக்கும். திரும்பிய வேகத்தோடு கத்தியைத் தட்டி விட்டான். அது 'டணர்' என்ற சத்தத்துடன் கப்பலில் விழுந்து, அங்கிருந்து தெறித்துப் பாய்ந்து கடலில் விழுந்து மறைந்தது.

மறு கணம் வந்தியத்தேவனை நாலா புறத்திலிருந்தும் பலர் வந்து பிடித்தார்கள். பிடித்தவர்கள் புரியாத பாஷையில் ஏதேதோ பேசிக் கொண்டார்கள். அவர்களுடைய தலைவன் அதிகாரக் குரலில் கட்டளையிட்டான். உடனே மணிக் கயிறு கொண்டு வந்து வந்தியத் தேவனுடைய கால்களையும், கைகளையும் கட்டினார்கள். கைகளை உடம்போடு சேர்த்துப் பிணைத்தார்கள். பின்னர் நாலு பேராக அவனைத் தூக்கிக் கொண்டு கீழ்த்தளத்துக்குப்போனார்கள். போகும் போதெல்லாம் உதைத்துத் திமிறி விடுவித்துக் கொள்ள வந்தியத் தேவன் முயன்றான். அந்த முயற்சி பலிக்கவில்லை. கப்பலின் அடித் தளத்தில் கொண்டு போய் அங்கே அடுக்கியிருந்த மரக் கட்டைகளின் மீது அவனைப் படார் என்று போட்டார்கள். அந்தக் கட்டைகளில் ஒன்றோடு சேர்த்துக் கட்டிவிட்டு மேலே சென்றார்கள்.

கப்பல் அப்படியும் இப்படியும் அசைந்து ஆடிற்று. கப்பல் தன் பிரயாணத்தைத் தொடங்கி விட்டது என்று வந்தியத் தேவன் அறிந்தான். கப்பல் ஆடியபோது மரக் கட்டைகள் அவன் மீது உருண்டு விழுந்தன. அவற்றை விலக்கிக் கொள்ள முடியாமல் அவனுடைய கைகள் கட்டப்பட்டிருந்தன.

"இந்த முறை மட்டும் தப்பிப் பிழைத்தால் இனி அவசரப்பட்டு எந்தக் காரியமும் செய்வதில்லை. ஆழ்வார்க்கடியானைப் போல் ஆழ்ந்து யோசித்த பிறகே செய்ய வேண்டும்" என்று வந்தியத் தேவன் மனத்தில் எண்ணிக் கொண்டான்.

அச்சமயம் பேய் சிரிப்பது போன்ற சிரிப்புச் சத்தம் அருகில் கேட்டது. வந்தியத்தேவன் மிகச் சிரமத்துடன் சற்று முகத்தைத் திருப்பிப் பார்த்தான். அங்கே மந்திரவாதி ரவிதாஸன் நின்று கொண்டிருப்பதைக் கண்டான். இது வரை மந்திரவாதியின் முகத்தில் பாதியை மறைத்துக் கொண்டிருந்த துணி இப்போது நீக்கப்பட்டிருந்தது.

"அப்பனே! அந்தச் சோழர் குலத்துப் புலியைத் தேடிக் கொண்டு வந்தேன். புலி அகப்படவில்லை. ஆனால் வாணர் குலத்து நரியாகிய நீ அகப்பட்டுக் கொண்டாய்! அந்த வரைக்கும் அதிர்ஷ்டம்தான்!" என்றான்.

* * *

மேற்கூறிய நிகழ்ச்சிகளில் வந்தியத்தேவன் படகில் ஏறிச் சென்றவரையில் தான் கரையில் இருந்தவர்கள் பார்த்தார்கள். மரக்கலத்துக்குள்ளே நடந்தது இன்னவென்பது படகோட்டிச் சென்றவனுக்கே தெரியாது. அவன் உடனே திரும்பிக் கரைக்கு வந்து சேர்ந்தான்.

சேநாபதி முதலியவர்கள் படகில் ஏறிக் கொண்டார்கள். இனி அந்த மரக்கலத்தைத் தொடர்ந்து போய்ப் பிடிக்க முடியாது என்ற தீர்மானத்துக்கு அவர்கள் வந்திருந்தார்கள். ஆகையால் தொண்டைமானாற்றின் சங்கமத்துக்குப் போய்ப் பார்க்க அவர்கள்

எப்படி இருக்கும்?



இது 1969-ம் வருஷ மாடல் ஃபோக்ஸ்வேகன் கார், 1953 ஆம் ஆண்டு மாடல் எப்படி இருந்திருக்கும்?

(49 ம் பக்கம் பார்க்க)

எண்ணினார்கள். இன்னொரு கப்பல் அங்கே இருக்கலாம். அதில் ஒருவேளை இன்னும் இளவரசர் இருக்கலாம். எப்படியும் ஏதாவது செய்தியாவது கிடைக்கும் அல்லவா?

படகுக்காரனைக் கேட்டுப் பார்த்தார்கள். அவனிடமிருந்து ஒரு விவரமும் தெரியவில்லை. ''படகில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தேன். அதிகாலையில் யாரோ வந்து தட்டி எழுப்பினார்கள். கப்பலில் கொண்டு விட்டால் நிறையப் பணம் தருவதாகச் சொன்னார்கள். நீங்கள் விழித்தெழுவதற்குள் திரும்பி வந்து விடலாம் என்று போனேன். வேறொன்றும் தெரியாது'' என்றான்.

* * *

மேலே கண்ட வரலாறுகளில் ஆழ்வார்க்கடியான் தான் அறிந்தவரையில் ஒன்று விடாமல் இளவரசரிடம் கூறினான்.

பின்னர், ''இளவரசே! வந்தியத்தேவன் கடலில் குதித்துப் பாய்ந்து சென்றபோது அவனைத் தொடர்ந்து நானும் போகலாமா என்று முதலில் நினைத்தேன். ஆனால் எனக்குக் கடல் என்றால் எப்போதுமே சிறிது தயக்கம் உண்டு. நன்றாக எனக்கு நீந்தத் தெரியாது. அத்துடன் அதோ போகிறதே, அந்தக் கப்பலைப் பற்றியும் எனக்குச் சிறிது சந்தேகம் ஏற்பட்டது. அதில் தாங்கள் ஏறிப் போவது சாத்தியமில்லை என்று தோன்றியது. இன்னும் அந்தக் கப்பல் சோழ நாட்டுக் கப்பலாக இருக்க முடியுமா என்ற ஐயமும் உண்டாயிற்று. இதைப் பற்றிச் சேனாதிபதியிடமும் கூறினேன். இருவரும் இங்கே வந்து பார்த்து முடிவு செய்வது என்று தீர்மானித்துக் கொண்டு வந்தோம். தங்களைப் பார்த்த பிறகுதான் எங்கள் மனம் நிம்மதி அடைந்தது'' என்றான்.

ஆழ்வார்க்கடியான் கூறியதையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டு வந்த அருள்மொழி வர்மர், ''ஆனால் என் மனத்தில் நிம்மதி இல்லை, திருமலை! வந்தியத்தேவன் அந்தக் கப்பலில் போகிறான். அவனைப் பழுவேட்டரையர்கள் பிடித்துப் பாதாளச் சிறையில் தள்ளி விடுவார்கள்!'' என்றார்.

அப்போது சேநாதிபதி, ''இளவரசே! அந்தக் கொடியவர்களின் அதிகாரத்தை எதற்காகப் பொறுத்திருக்க வேண்டும்? தாங்கள் மட்டும் சம்மதம் கொடுங்கள். அடுத்த பௌர்ணமிக்குள் பழுவேட்டரையர்களின் அதிகாரத்தைத் தீர்த்துக் கட்டி அந்தப் பாதாளச் சிறையில் அவர்களையே அடைத்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன்!'' என்றார்.

''ஐயா! என் தந்தையின் விருப்பத்துக்கு விரோதமாக நான் அணுவளவும் நடந்து கொள்வேன் என்று தாங்கள் கனவிலும் எதிர்பார்க்க வேண்டாம்!'' என்றார் இளவரசர்.

இந்தச் சமயத்தில் குதிரை ஒன்று வேகமாக வரும் சத்தம் கேட்டு எல்லாரும் திரும்பிப் பார்த்தார்கள். சற்றுத் தூரத்திலேயே அந்தக் குதிரை நின்றது. முகக் கயிறு, உட்கார ஆசனம் ஒன்றும் இல்லாமல் அந்தக் குதிரை மேல் ஏறி வந்தவள் ஒரு ஸ்திரீ என்று அறிந்ததும் அனைவரும் வியப்படைந்தார்கள்.

(தொடரும்)

பெண்கள் என்றாலே
குறிப்பிட்ட சில
நாட்களில் அசௌ
கரியமும் வேதனையும்
இருக்கக்கூடும்.
ஸாரிடான் அவற்றி
லிருந்து விடுதலை
அளித்து அவர்களைப்
புத்துணர்வோடும்
மகிழ்வோடும்
இருக்கச் செய்கிறது.

**ஸாரிடான்**

HTA-VT-8433



# ராமாயணம் ராஜாஜி

## 26. வனம் சென்றனர்

குமாரன் மரவுரி தரித்துக் கடைசியாகப் பேசியதைக் கேட்ட அரசன் மனமுடைந்து போய்ப் படுக்கையில் கிடந்தான். ராமனை நினைத்துக்கொண்டு அழுதான். பேச முடியவில்லை.

பேசுவதற்குக் கொஞ்சம் சக்தி வந்ததும், "நான் எத்தனையோ கன்றுகளைக் கொன்று தாய்ப் பசுக்களை இம்சித்திருக்க வேண்டும். இல்லாவிடில் இந்தத் துக்கம் எனக்கு நேர்ந்திராது. மரணமும் நாம் வேண்டும்போது நம் இஷ்டப்பிரகாரம் வராது. கைகேயினுடைய இம்சையை நான் அனுபவிக்க வேண்டியதாக இருக்கிறது.

"அக்கினி தேவனைப் போல் எழில் கொண்ட என் மகன் தன் உடையைக் கழற்றிவிட்டு மரவுரியைத் தரித்தான். நானும் பார்த்துக் கொண்டு உயிருடன் இருக்கிறேன்... ராம..ராம..ராம..... வனம் போய் விட்டாயா?" என்று முணுமுணுத்துக் கொண்டு படுக்கையில் அரை நினைவாகக் கிடந்தான்.

பிறகு தெளிந்து, "சுமந்திரனே! ரதம் கொண்டு வந்து, குழந்தைகளையும் ஜானகியையும் ஏற்றிக் கொண்டு ராஜ்யத்து எல்லை வரையில் போ!" என்றான்.

*　　*　　*

லக்ஷ்மணன் சுமத்திரா தேவியின் பாதங்களைத் தொட்டு வணங்கி, "அம்மா!" என்று சொல்லி வேறு பேச்சில்லாமல் நின்றான்.

அவனைக் கட்டி அணைத்துச் சுமித்திரை உச்சி மோந்து, "நீ அண்ணன் பேரில் வைத்திருக்கும் அன்பே போதும். உன்னைப் பெற்றதின் பெரும் பாக்கியம் அடைந்து விட்டேன். குழந்தாய்! ராமனைக் காப்பது உன் கடமை. வனத்தில் மிக ஜாக்கிரதையாக அண்ணன் பக்கத்தில் எப்போதும் இருக்க வேண்டும். தம்பிக்கு அண்ணன் குருவும் அரசனுமேயாவான். இது நம் குலத்தின் தருமம். போய் வருவாய், லக்ஷ்மணா! காட்டில் ராமனே உனக்குத் தந்தை; ஜானகியே தாய்; இதை அறிவாய். வனத்தை அயோத்தியாகவே பாவிப்பாய். சந்தோஷமாகப் போ, என் அன்புக்குரிய மகனே!" என்றாள்.

*　　*　　*

ராமாயணக் கதையில் அதிகம் பேசாத மகா ஞானி, எதையும் முதிர்ந்த அறிவுடன் சரியாக உணர்ந்து நடந்து கொள்கிறவள் சுமத்திராதேவி. ராமனுடைய அவதார ரகசியம் சுமித்திரைக்குத் தெரிந்திருந்ததாகப் பெரியவர்கள் சொல்வார்கள். கௌசல்யா தேவியைப் போல் மகனைத் தடுத்துப் பேசாமல், "போய் வருவாய்" என்று சுமித்திரை தன் மகன் லக்ஷ்மணனுக்குத் தைரியமாகச் சொன்னாள்.

"ரதத்தில் ஏறுவாய், சக்கரவர்த்தித் திருமகனே! புகழின் சிகரமே! உனக்கு மங்களம். எங்கு செல்ல வேண்டுமோ, செல்லுவாய். உனக்கு மங்களம். பதினான்கு வருஷம் இப்பொழுதிலிருந்தே ஆரம்பமாகி விட்டது, ராஜகுமாரா!" என்றான் சுமந்திரன்.

*　　*　　*

சீதை சிரிப்பும் சந்தோஷமுமாகத் தேரில் ஏறினாள். அவளுக்கு வேண்டிய துணி மணிகளையெல்லாம் மாமி கௌசல்யை கட்டிக் கொடுத்தாள். இரு சகோதரர்களுடைய கவசங்களும் ஆயுதங்களும் கிழங்கு தேடி வெட்டிக்

கொள்வதற்கான குந்தாலியும் கூடையும் தேரில் வைக்கப்பட்டன. வனவாசத்துக்கு முக்கியமாகக் கூடையும் குந்தாலியும் வேண்டும்.

ராம லக்ஷ்மணர்களும் ஏறினார்கள். சுமந்திரன் தேரை ஓட்டினான்.

* * *

இந்தக் கட்டத்தில் கொஞ்சம் நின்று நாம் ஆண்டவனைத் தியானிக்கலாம். வனவாசம் ஆரம்பமாகிய இந்தப் புண்ணிய கட்டத்தில் நம்முடைய பாப எண்ணங்களை விலக்கித் தூய்மை அடைய விரும்பிப் பிரார்த்திப்போமாக. சத்தியம், தீரம், அன்பு இவை ராமாயணத்திலிருந்து நாம் பெறும் பிரசாதம். அதற்காகவேதான் ராமாவதாரம். மரவுரி உடுத்திய சக்கரவர்த்தித் திருமகனையும் தம்பி லக்ஷ்மணனையும் ஜானகியையும் மனத்தில் நிறுத்தி ஆண்டவன் அருட்பிரசாதத்தைக் கேட்போமாக.

“இழுத்துப் பிடி, இழுத்துப் பிடி, சாரதியே! ரதத்தை மெல்ல ஓட்டு. ராமன் முகத்தையாவது நன்றாகப் பார்ப்போம்'' என்று தெருவில் நின்ற ஜனங்கள் கத்தினார்கள்.

''ஐயோ! இப்படிப்பட்ட புத்திரர்களைப் பெற்று விட்டுக் காட்டுக்கு அனுப்புகிறார்களே! இவர்களைப் பெற்ற தாய்மார்களுடைய வயிறு எரியாதா? உயிர் நிற்குமா? பார்த்தாயா வைதேஹியை? இவளல்லவோ புண்ணியவதி! இந்த லக்ஷ்மணன் அல்லவோ பாக்கியவான்! இவனல்லவோ ஒரு தம்பி! தருமம் அறிந்த வீரன்!''

இப்படி யெல்லாம் பேசிக் கொண்டு ரதத்தைத் தொடர்ந்து நகரத்து ஜனங்கள் ஓடினார்கள். அவர்களுடைய துக்கம் ஆறாகப் பெருகிற்று.

''ஒரு பக்கம் ரதத்தை வேகமாகச் செலுத்து'' என்கிறான் ராமன். ஜனங்களோ, ''மெள்ள, மெள்ள!'' என்



கிறார்கள். கூட்டமோ மிகப் பெருங் கூட்டமாகப் போயிற்று.

எப்படியோ சமாளித்துக் கொண்டு சுமந்திரன் ரதத்தை அயோத்தியை விட்டு வெளியே செலுத்தினான். நகரம் துக்கத்தில் மூழ்கிற்று. ஒவ்வொரு வீட்டிலும் கண்ணீரும் உபவாசமும் நிந்தனையுமாக இருந்தன.

* * *

அரசன் அந்தப்புரத்தை விட்டு வெளியே வந்து ரதம் புறப்பட்டதைப் பார்த்துக் கொண்டு வெகு நேரம் நின்றான். தேர் கிளப்பிய தூசியையே ராமனைப் பாவித்து அந்தத் தூசி கண்ணுக்குத் தெரியும்வரையில் பார்த்துக்கொண்டு நின்றான். அந்தத் தூசியும் மறைந்து போன பின் 'ஐயோ!' என்று கதறிக் கீழே விழுந்தான். ஒரு பக்கம் கௌசல்யையும் மறு பக்கம் கைகேயியும் இருந்தார்கள்.

தசரதன் கைகேயியைப் பார்த்துச் சொன்னான்: ''பாவியே! என்னைத் தொடாதே! நெறி தவறியவளே! உன் முகத்தைப் பார்க்க எனக்கு வேண்டியிருக்கவில்லை. உனக்கும் எனக்கும் சம்பந்தம் அற்றது. உன்னை விட்டேன்! விட்டேன்!'' என்றான்.

''பரதனும் இதற்குச் சம்மதித்து ராஜ்யத்தைச் சந்தோஷமாக ஏற்றுக் கொண்டானேயானால் எனக்காக அவன் நீர்க் கடன் செய்தாலும் அது என்னைச் சேராது'' என்றான்.

''ராமன் எவ்வாறு காட்டில் வசிப்பான்? கல்லோ கட்டையோ தலைக்கு வைத்துத் தரையிலா படுப்பான்? ஐயோ, அவன் எவ்வாறு கிழங்கும் காயும் உண்டு பிழைப்பான்?''

இப்படிப் பலவாறு பிரலாபித்தான். தானே நெருப்பில் கை வைத்துக் கையைச் சுட்டுக் கொண்டு அழுவது போல் தசரதன் தானே செய்த காரியத்தின் முடிவை எண்ணி எண்ணிப் பிரலாபித்தான்.

''கைகேயி! நீ சுகமாக இரு. உன் காரியத்தை நடத்தி முடித்தாயல்லவா? விதவையாகிச் சந்தோஷமாக இரு!'' என்று அவளை நினைத்துக் கோபாவேசமானான். மயானத்தில் ஸ்நானம் செய்து திரும்பிய நிலையில் அந்தப்புரம் போய்ச் சேர்ந்தான்.

''இங்கே வேண்டாம். என்னைக் கௌசல்யை வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள்'' என்றான்.

அவ்வாறே செய்தனர். கௌசல்யா தேவியின் அந்தப்புரத்தில் தசரதன் பிரலாபித்துக் கொண்டு படுத்தான்.

நடு ராத்திரியில் ''கௌசல்யா! நீ இருக்கிறாயா? கைகளால் தொட்டுக் காட்டு. என் கண்களில் திருஷ்டி போய் விட்டது. ராமனுடன் போய் விட்டது'' என்றான்.

கௌசல்யா தேவியின் துக்கமோ மிகப் பெரிது. தன் துக்கத்தையும் பொறுத்து அரசனுக்கு அவள் என்ன சமாதானம் சொல்ல முடியும்?

''இராத்திரி நேரம் கூட நடு மத்தியான வெய்யிலைப் போல் உடலைச் சுடுகிறதே'' என்று அவளும் அழுதாள்.

சுமித்திரை கௌசல்யைக்குச் சொன்னாள்: ''அக்கா! சாஸ்திரமும் தருமமும் தெரிந்த நீ ஏன் துக்கப்படுகிறாய்? மற்றவர்களுக்கு வழி காட்ட வேண்டிய நீ இப்படித் தைரியம் இழக்கலாகாது. சத்தியத்துக்காக அல்லவோ ராமன் வனம் சென்றிருக்கிறான்? ராஜ்யத்தைத் துச்சமாக எண்ணித் தந்தையை சத்தியவான் ஆக்குவதே தன் கடமை என்று வனம் சென்ற தீரனை மகனைப் பெற்ற நீ அல்லவோ பாக்கியசாலி? கஷ்டமான தருமத்தைக் குறைவற நடத்திப் பயனடையும் உன் மகனைப் பற்றி நீ துக்கப்படலாமா? முன்னோர் வழியில் நடந்து அனந்தமான - முடிவில்லாத புகழ் பெறும் ராமனைப்பற்றி நாம் துயரப்படலாகாது''என்றாள். **(தொடரும்)**





# ப்ரூக் பாண்ட்

# ப்ரூ இன்ஸ்டன்ட்

## நொடிப் பொழுதில் தயார்! கப்புகள் கணக்கிலே திருப்தி!

ப்ரூ தயாரிப்பது சுலபம்! வெந்நீரை ஊற்றி, விரும்பும் சுவை பெற பாலும் சர்க்கரையும் சேர்த்துக் கொள்ளவும். அசல் காபி–சிக்கரி மணமும் சுவையும் கொண்டு உங்களுக்குப் புத்துணர்ச்சி அளிக்க நொடிப் பொழுதில் ப்ரூ தயாராகிவிடுகிறது!

நினைவிலிருக்கட்டும், ப்ரூ தயாரிப்பதிலே, சிறிதுகூட சிரமமோ அல்லது வடிகட்டும் தொந்தரவோ கிடையாது.

இதற்கு மேலாக, நீங்கள் விரும்பும் சுவைக்கேற்றபடி ப்ரூவை சிறிது அதிகமாகவோ அல்லது குறைவாகவோ சேர்த்து தயாரித்துக் கொள்ளலாம்.

வாங்குங்கள் ப்ரூ—காபியும் சிக்கரியும் கலந்த சுவையை நன்கறிந்த ப்ரூக் பாண்டின் ருசி பார்த்துத் தரம் காணும் திறமையாளர்களால் கவனத்துடன் கலக்கப்பட்டது.

இது நொடிப்
பொழுதிலாகிறது!
நேரம் மிச்சம்!
பணம் மிச்சம்!



# "பிரேம நதிக்கரையில் ஞான நடுநிசியில்...!"

ரா. கணபதி

ராணா சிம்மாதனத்தில் அமர்ந்திருந்தான், உணர்ச்சிக் கொந்தளிப்பின் உருவமாக.

கைதிக் கூண்டில் நின்றாள் மீரா, அமைதியின் அழகு வடிவமாக.

வயது முதிர்ந்த முதன்மந்திரியால் இக்காட்சியைக் காணச் சகிக்கவில்லை.

''ராவல்ஜி! தங்கள் பக்கலில் அரியணையில் அமர வேண்டிய தேவியை இப்படி நாடறியக் கைதிக் கூண்டில் நிறுத்தி வைக்கலாமா? வேண்டாம் இந்தக் கொடுமை'' என்று அலறினார்.

ராணா முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு கல்லாக அமர்ந்திருந்தான்.

மீரா தனது தூய திருமுகத்தை நன்கு நிமிர்த்தி, பிரதான மந்திரியைத் தெளிவாகப் பார்த்து உறுதியாகப் பேசினாள்:

''ராவல்ஜியுடன், அரியணையில் அமர மறுத்தது நான்தான். அது ஆதியிலேயே நடந்த கதை. ஆனால் அன்று போல் இன்றும் நீதி என்கிற தேவி அவருடன் சிம்மாதனத்தில் அமர்ந்து கொண்டுதான் இருக்கிறாள். அதனால்தான் 'மக்களுக்கு ஒரு நீதி, மன்னர் குடிக்கு ஒரு நீதி' என்று மாறுபாடு செய்யாமல் என்னையும் இங்கு பொது ஸ்தலத்தில் வைத்து அவர் விசாரணை புரிகிறார்.....''

''தேவி! தாங்கள் சொல்வது சரிதான். ஆனால் திருமாலின் இருபுறமும் இரு தேவியர் சூழ்ந்திருப்பது போல், வைஷ்ணவாம்சமான மன்னருக்கு ஒரு புறம் நீதியும், மறுபுறம் கருணையும் சூழ்ந்திருக்க வேண்டுமே! இப்போது அந்தக் கருணைத் தேவி எங்கே?'' என்று நாத் தழுதழுக்கக் கேட்டார் பிரதமர்.

மீராவும் நெகிழ்ச்சி அடைந்தாள். மன்னனைப் பரிதாபமாகப் பார்த்துக் கேட்டாள்:

''பிரபு! என் மீது விசாரணை நடத்துவதற்கோ, தண்டனை வழங்குவதற்கோ நான் எவ்விதத்திலும் ஆட்சேபிக்கவில்லை. அந்தத் தண்டனை மரண தண்டனையாகவே இருக்க வேண்டும் என்பதுதான் என் பிரார்த்தனை. ஆனால் தங்களைத் தாங்களே இப்படி நெஞ்சு வறட்சியால் தண்டித்துக் கொள்கிறீர்களே! இதைத்தான் என்னால் தாங்க முடியவில்லை. நீதி விசாரணையில் மன்னர் குடியும் சாமானிய மக்களும் ஒன்றே என்ற சமத்துவத்தை ஒப்புக் கொள்ளும் பெருமனத்தவராகிய தங்களால் பகவத் சந்நிதியில் ஆண்டியும் அரசனும் ஒன்றே என்பதை ஏன் ஒப்புக் கொள்ள முடியவில்லை? நான் பாமர மக்களுடனும் பரதேசிகளுடனும் பாடி ஆடி பஜனை புரிவது தங்களுக்கு ஏன் பயங்கரமான குற்றமாகப் படுகிறது?''

ராணா தன் கண்களில் கரை கட்டிய நீர் உலறும் வரை தலை தூக்கவில்லை. சூரிய வம்சத்தில் பிறந்த அவன் தனது குல முன்னோனாகிய ஸ்ரீ ராமனைத் தியானித்தான். 'இலங்காபுரியில் வானரருக்கும் அசுரருக்கும் மத்தியில் சீதாதேவியைக் குற்றம் சாட்டிய ராஜ தர்ம ஸ்வரூபனே! என்னையும் அந்தத் தயா தாட்சண்யமற்ற ராஜ தர்மத்தில் நிலைநிறுத்துவாய்' என்று பிரார்த்தித்தான். பிறகு தொண்டையைக் கனைத்துக் கொண்டு கூறினான்:

''எனக்கு உன் செய்கை பயங்கரக் குற்றமாகப் பட்டதோடு இல்லை; இதோ, நாடு முழுவதுமே இந்தக் குற்றத்தின் பயங்கரத்தை உணரப் போகிறது; நீயும் உணருவாய். அதற்காகத்தான் இந்த விசாரணை... பிரதான மந்திரி! ஏன் கால தாமதம் செய்கிறீர்கள். அழையுங்கள் சாட்சிகளை!''

முதலில் சித்தோர் நகரக் கொத்தவால் வந்தார். அரண்மனையிலுள்ள கண்ணன் கோயிலுக்கு வந்த யாத்திரிகர் இருவரைப் பற்றி அர்ச்சகர் சம்சயம் கொண்டு தம்மிடம் புகார் கொடுத்ததாக அவர் கூறினார். அந்த யாத்திரிகர்களைக் கண்டுபிடிக்கத் தாம் எடுத்த முயற்சி பலிக்கவில்லை என்றும் அவர்கள் ராஜஸ்தானத்தை விட்டே தப்பி விட்டதாகவும் கூறினார்.

அடுத்தபடியாக ஆலயத்தின் அர்ச்சகர் சாட்சி கூறினார்: ''ஒரு நாள் மீரா தேவி ஆலயத்தில் ஏகாந்த வழிபாடு புரிகையில் இரண்டு யாத்திரிகர்கள் தரிசனத்துக்கு வந்தனர். தேவி ஏகாந்த வழிபாடு புரியும் போது எவரையும் உள்ளே அனுமதிப்பதில்லை என்று நான் எவ்வளவோ தடுத்துக் கூறியும் அவர்கள் கேட்கவில்லை. 'நாங்கள் கூட்டத்தில் வருவதற்கில்லை. எவர் கண்ணிலும் படாமல்தான் நாங்கள் தேவியின் பக்தி கானத்தைக் கேட்க விரும்புகிறோம். எனவே தயை கூர்ந்து எங்களை அனுமதியுங்கள். ஒரே ஒரு பாடல் கேட்டு விட்டுத் திரும்பி விடுவோம்' என்று அவர்கள் கண்ணீர் மல்க வேண்டிக் கொண்டனர். அந்த வேண்டுகோள் என்னை இளக்கி விட்டது. அவர்களை ஆலயத்துக்குள் அனுமதித்தேன். அவர்கள் சொன்ன சொல் தவறாமல் சில நிமிடங்களில் வெளியேறி விட்டனர். பிறகு நான் சந்நிதிக்குச் சென்றேன். அன்னை தன் இரு கரங்களிலும் மலர் மாலை வழிய, பாவ சமாதியில் கண்ணன் முன்பு கண் மூடிக் கானம் செய்து கொண்டிருப்பதைக் கண்டேன். அவரது கண்களிலிருந்து முத்து முத்தாக நீர் வழிந்து, கரத்தில் உள்ள மலர்களின் மீது சொட்டிக் கொண்டிருந்தது. திடுமென எனக்கு ஒரு பிரமை ஏற்பட்டது. அந்தக் கண்ணீர் முத்துக்கள் ஒரு சரமாகக் கோத்துக் கொண்டு மலர்களின் மீது நெளிவது போல் ஓர் அதிசய உணர்வு ஏற்பட்டது. அருகில் சென்று பார்த்தேன். தேவியின் கைகளில் ஏந்திய புஷ்பங்களுக்கிடையில் மெய்யானதொரு நல்முத்து மாலையே இருப்பதைக் கண்டேன்.

''அன்னையின் சமாதி கலைந்தது. அற்புதமான அந்த முத்து மாலை ஏது என்று கேட்-

டேன். 'முத்து மாலையா?' என்று வியப்புடன் கேட்ட தேவி, தமது கரத்தில் இருந்த சரத்தைப் பார்த்துத் தாமே அதிசயித்தார். பிறகு சொன்னார்: 'கிரிதாரியின் லீலையே லீலை! யாரோ இரண்டு யாத்திரிகர்கள் உங்களுடைய உத்தரவு பெற்று இங்கே வந்தார்கள் அல்லவா? அவர்களில் ஒருவர் கண்ணனுக்காக மலர் மாலை கொண்டு வந்திருப்பதாகவும் அதனை என்னிடம் கொடுக்க விரும்புவதாகவும் கூறினார். நான் கையை நீட்டினேன். அவர் சொன்னார்: 'பாதுஷாவின் முத்துமாலையைச் சூடவேண்டியவன் இக்கண்ணன். இப்பேர்ப்பட்டவனுக்காக நான் கொண்டு வந்திருக்கும் அற்பமான ஹாரத்தை உங்கள் கண்ணெதிரே எடுக்கவே வெட்கமாக இருக்கிறது. ஆனால் அவனுக்கெனக் கொண்டு வந்ததை அர்ப்பணம் செய்யாமல் திருப்பி எடுத்துச் செல்லவும் மனம் வரவில்லை. கண்ணை மூடிக் கொள்ளுங்கள். உங்கள் கையில் போட்டு விட்டு நாங்கள் ஓடி விடுகிறோம்' என்றார். அவரது விசித்திர மனோபாவத்தை வியந்தபடி நான் கண் மூடிக் கரம் நீட்டினேன். கண்ணனின் கீதைக் குரல் கேட்டது. 'பச்சிலையோ, பழமோ, பூவோ, துளி நீரோ எதுவாயினும் பக்தியுடன் தந்தால் பரிந்து ஏற்பேன்' என்றான் பிரபு. அந்தக் குரலில் சொக்கிப் பாவ சமாதி அடைந்து விட்டேன். இப்போதுதான் கண் திறக்கிறேன். மெய்யாகவே அவர்களது பக்தியால் பாதுஷாவுக்குரிய முத்து மாலை முகிழ்த்திருக்கிறது. எங்கே அந்தப் பரம பாகவதர்கள்?'

''தேவி இப்படிக் குழந்தை போல் கூறினாலும் எனக்கு விலவிலத்து விட்டது. எவர் கண்ணிலும் படாமல் அவர்கள் அன்னையின் கானத்தைக் கேட்க விரும்பியதும், பாதுஷாவின் முத்து மாலை பற்றிக் கூறியதும், இப்போது மெய்யாகவே அன்னையின் கரத்தில் விலை மதிப்பிடவொண்ணாத முத்து மாலை இருந்ததும், அவர்கள் அவசரம் அவசரமாக



காந்திஜி விரும்பிய கீதம்

வெளியேறி விட்டதும் எனக்குப் பயங்கரமான ஐயங்களை உண்டாக்கின....''

தயங்கினார் அர்ச்சகர்.

ராணா சரமின்றிக் கேட்டான்: ''என்ன ஐயம் ஏற்பட்டது? எதனால் ஏற்பட்டது? ஒளிவுமறைவின்றிச் சொல்லுங்கள்.''

அர்ச்சகர் குழறினார்: ''அக்... அக்.... அக்பர் பாதுஷாவும், அவரது ஆஸ்தான உஸ்தாத் தான்ஸேனும்....''

''உம், வெளிப்படையாகச் சொல்லுங்கள்'' என்று உறுமினான் ராணா.

''ராவல்ஜிக்குத் தெரிந்த விஷயம்தான்'' என்று மென்று விழுங்கினார் அர்ச்சகர்.

''ராவல்ஜிக்குத் தெரிந்தாலும் இந்தச் சபைக்குப் பகிரங்கமாகத் தெரிய வேண்டும். தயங்காமல் சொல்லுங்கள்.''

அர்ச்சகர் சுதாரித்துக் கொண்டு கூறினார்: ''அக்பரும் தான்ஸேனும் தேவியாரது கானத்தைக் கேட்க வேண்டும் என்று ராவல்ஜிக்கு எழுதிக் கேட்டிருந்ததாகவும், 'ராஜஸ்தானப் பெண்களைப் பார்க்கவோ அவர்கள் பாடிக் கேட்கவோ அந்நியர்களை அனுமதிப்பதற்கில்லை' என்று ராவல்ஜி பதில் கொடுத்ததாகவும் கேள்விப்பட்டிருந்தேன். அதையும் இப்போது நடந்த சம்பவத்தையும் பொருத்திப் பார்த்ததில், அந்த யாத்திரிகர் இருவரைப் பற்றியும் சம்சயம் எழுந்தது. அதனால்தான் கொத்தவாலிடம் புகார் கொடுத்தேன்'' என்று முடித்தார் அர்ச்சகர்.

அரசவை அதிர்ந்து விட்டது.

'கண்ணன் கோயிலினுள் மாற்று நாட்டு மன்னர் — மாற்று மதத்து மன்னர் — மாறு வேஷத்தில் வந்து, ராணி ஏகாந்தமாக இருக்கையில் உரையாடிச் சென்றாரா? ராஜஸ்தானத்துக்கு இப்படியோர் அவக்கேடு ஏற்பட்டு விட்டதா?' என்று சபையோர் ஸ்தம்பித்துவிட்டனர். 'இதுவ்வளவும் பொய்யான ஹேஷ்யமாக முடிந்து விடக் கூடாதா? மகத்தான குற்றத்துக்குத் தேவி மீரா ஆளாகாதிருக்கக் கூடாதா?' என்று அவர்களது உள் மனம் பிரார்த்தித்தது.

ஆனால் மாயக் கண்ணன் அந்தப் பிரார்த்தனையை ஈடேற்றவில்லை.

அடுத்துச் சாட்சியம் சொன்ன அரண்மனைப் பொற் கொல்லர் நிலவரத்தை வெட்ட வெளிச்சமாக்கி விட்டார்.

''இந்த முத்தாரக் கட்டிட வேலை எங்கள் குடும்பம் மட்டுமே அறிந்த தனிப் பாணியாகும். இந்தத் தலைமுறையில் எனக்கும் என் சகோதரனுக்கும் மட்டுமே இந்த விசேஷமான இழைப்பு வேலை தெரியும். நான் இந்த மாலையைக் கட்டவில்லை என்பது பரம சத்தியம். எங்கள் குடும்பம் செய்த பாபத்தின் பயனாக என் சகோதரன் அக்பர் பாதுஷாவின் அரண்மனையில் பணியாற்றுகிறான்'' என்றார் அவர்.

நீதியைப் பொறுத்தமட்டில் மேகங்கள் விலகி வெளியாக்கி விட்டன.

கருணையைப் பொறுத்த மட்டிலோ கரு மேகங்கள் குழும்பிக் கொண்டு குழுமின.

மேகங்கள் விலகியபோது நீலவானில் கண்ணனைக் கண்ட மீரா, குழுமி வந்த கரு முகில்களிலும் அக் கார்மேகக் கண்ணனையே கண்டாள். எனவே அதே அமைதியுடன், சாந்தியுடன், நிம்மதியுடன் நிச்சிந்தையாக நின்றாள்.

''மீரா! நீ சொல்லவேண்டியதைச் சொல்'' என்றான் ராணா, ஆக்கிரத்துடன். ராஜஸ்தானத்தின் கௌரவத்தை நாசமாக்கிய மீராவிடம் அவனுக்கு ஆக்கிரமா, குடும்ப கௌரவம் என்கிற ஒன்றுக்காகத் தூய மீராவைக் குற்றம் சாட்டுவதற்காகத் தன் மீதே ஆக்கிரமா? அவனுக்கே அது விளங்கவில்லை.

மீரா கூறினாள்: ''நான் சொல்ல ஏதும் இல்லை. இங்கு கூறிய சாட்சியம் எல்லாம் முற்றிலும் மெய்யானது என்றே காண்கிறேன். எனக்குரிய தண்டனையைப் பெற்றுக் குற்றத்துக்குக் கூலி தரவே விரும்புகிறேன்.''

மடலை விரித்துத் தண்டனையை எழுதலானான் மகாராணா. மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு எழுதி விட்டான். ஆனால் அதை வாய் விட்டுப் படிக்க அவனாலேயே இயலவில்லை.

மந்திரியிடம் அதை வீசிவிட்டு, சிலையாக அமர்ந்திருந்தான்.

தீர்ப்பைப் படித்துப் பார்த்த அமைச்சரின் கண்கள் நீரைப் பெருக்கின. அவராலும் அதைப் படிக்க முடியவில்லை.

அருகே யிருந்த தூதுவனிடம் அதைக் கொடுத்து வெளியே அனுப்பி விட்டு அவரும் ஒரு மடல் எழுதி மன்னனின் பாதத்தில் வைத்தார். பிறகு அரசவையிலிருந்து வெளியேறினார்.

அவரது மடலைப் பிரித்துப் படித்தான் மன்னன். ''நீதித் தேவதையின் சாந்நித்தியத்தைத் தாங்கும் சக்தி எனக்கில்லை. எனவே பதவியிலிருந்து விலகுகிறேன்'' என்று ரத்தினச் சுருக்கமாக எழுதியிருந்தார்.

அடுத்த சில விநாடிகளுக்குள் அமைச்சர் அனுப்பிய தூதனுடன் சிரச்சேத அதிகாரி அவையில் பிரவேசித்தார்.

''ஹா'' என்று அலறியது சபை.

சிரச்சேத அதிகாரி மன்னனின் தண்டனை உத்தரவோடு இன்னொரு மடலையும் சுருட்டி அவனது காலடியிலேயே வைத்துவிட்டு, சிரம் தாழ்த்தி வணங்கினார். பிறகு அவரும் அவையினின்று வெளியேறினார்.

அந்த இன்னொரு மடல் இன்னதென்பது அரசனுக்கும் புரிந்தது; அவையோருக்கும் புரிந்தது. அந்த அதிகாரியும் பதவியை விட்டு விலகியிருக்கிறார் !

'அவர்கள் பதவியை விட்டு விலகி நிம்மதி பெற முடியும். மீராவோ இப்பாழும் உலகையே விட்டு விலகி அமைதி பெற முடியும். ஆனால் தன் கதி?' என்று எண்ணினான் ராணா. 'சீ ! ராஜஸ்தானச் சக்கரவர்த்தி சுய அநுதாபம் என்ற இழிதகைமைக்கு ஆளாகலாமா?' என்று தன்னையே கல்லாக்கிக் கொண்டான்.

''மீரா'' என்று கம்பீரமாக அழைத்தான். தண்டனை உத்தரவை அவளிடம் நீட்டினான்.

ஆதியில் அவன் அவளுக்கு மணமாலை சூட்ட வந்த போது, கண்ணனை நினைத்துக் கண்ணீரும் கம்பலையுமாக நின்ற அதே மீரா, இன்று தண்டனை உத்தரவைப் பரமானந்தத்துடன் பெற்றுக் கொண்டாள்.

ராணு கூறினான் : ''பரம புருஷனுக்காக ஒரு வேள்வி நடந்தது; அதில் அந்தப் பரம புருஷன் தானே பலியாகி இந்தப் பிரபஞ்சத்தை உண்டாக்கினான் என்று வேதருக்தம் பாடுகிறது. மீரா, இப்போது நடக்கவிருக்கும் நீதி வேள்வியில் உன்னைப் பலி தர யாரும் முன்வர மறுப்பதால், பலியாகும் நீயே பலியிடுகிற புரோகிதராகவும் இருப்பாய்!''

மீரா கரம் குவித்து ஒப்புதல் தந்தாள்.

''அதோடு வேள்விக்கு மந்திரம் இசைக்கும் உத்காதாவாகவும் நானே இருப்பேன். சியாமளனைப் பாடுவதே இந்த யாகத்துக்குச் சாமகானம்'' என்று மலர்ச்சியுடன் கூறினாள்.

சபை விம்மி அழுதது.

ரங்கமஹாலின் சுற்றுப்புறங்களைக் காவல் காக்கும் பணியாள், நடுநிசியில் ஒரு பெண்ணுருவம் செல்வதைக் கண்டு, ''நில்' என்று உத்தரவிட்டான்.

''உன் சட்டத்தைவிடப் பெரிய சட்டத்துக்கு உட்பட்டு விட்டேன். எனவே, நிற்பதற்கில்லை'' என்று கூறியபடியே அவ்வுருவம் கடுகிச் சென்றது.

காவலாளிக்கு அக்குரல் வியப்பூட்டியது. 'அப்படியும் இருக்க முடியுமா?' என்ற ஐயம் எழுந்தது.

அவ்வுருவத்தைத் தொடர்ந்தபடியே, ''யாரது ? எங்கே செல்வது ?'' என்றான்.

''யாரா ? நான்தான். 'நான்' என்பது ஒரு பதிலா என்று யோசிக்க வேண்டாம். இந்த உலகில் நானாக இருக்க முடியாமல் திண்டாடிவிட்டு, கடைசியில் நிஜமாகவே நானாகப் போகிற ஒரே ஒரு நான் இதோ போய்க் கொண்டிருக்கிறேன். எங்கே போகிறேன்? என்று கேட்டாய். வேறெங்கு போவேன் ? பிருந்தாவனத்துக்குத்தான்.''

அது யார் என்று காவலாளிக்குப் புரிந்து விட்டது. ''சாகேபாஜி! தாங்கள் தனியாகப் போகலாமா ? மேலும் பிருந்தாவனத்துக்கு இது வழியல்லவே !'' என்றான்.

''அட, அசடே! சகலத்தையும் விட்டு விட்டுத் தன்னந் தனியாகப் போனாலன்றி அங்கு செல்ல முடியாது என்று உனக்குத் தெரியாது போலிருக்கிறது. பிருந்தாவனத்துக்கு இது வழி இல்லை என்கிறாயே! 'அன்பர்கள் எந்த வழியில் சென்றாலும் இறுதியில் என்னையே அடைவார்கள்' என்று கீதாசாரியன் சொன்னது தெரியாதா ?''

நிற்காமல் விரைவாக நடந்து கொண்டேயிருந்தது அந்த உருவம்.

மகாராணி மீராதேவியை எப்படி நிறுத்துவது என்று காவலாளிக்குப் புரியவில்லை. இனம் தெரியாமல் அவனது இதயம் அடித்துக் கொண்டது.

மகாராணாவின் சயனக்கிருகத்துக்கு ஓடினான். கதவை இடித்தான்.

உறக்கம் கொள்ளாமல் உன்மத்தனாக அமர்ந்திருந்த ராணு கதவைத் திறந்தான். 'சாகேபா' தனியாக எங்கோ செல்வதைத் தெரிவித்தான் காவலாள்.

அவளைப் பின்தொடர்ந்தான் ராணு.

ரங்கமஹாலின் வெளிச்சுற்றுத் தோப்பு முடிகிற இடத்தில் மீரா வேகமாகச் சென்று கொண்டிருந்தாள்.

இரைக்க இரைக்க அவளைப் பின் தொடர்ந்தான் ராணு.

சிறு குன்று ஒன்றின் மீது குன்றாத உறுதியுடன் அவள் ஏறுவதைக் கண்டான்.

''மீரா, மீரா'' என்று ராணு அலறியது அந்தகாரத்தில் வனம் முழுதும் பரவியது.

குன்றின் உச்சியிலிருந்து மீரா திரும்பிப் பார்த்தாள். ராணுவுக்குக் கையெடுத்துக் கும்பிட்டாள்.

''மனிதனாகி விடாதீர்கள். மன்னனாகவே இருங்கள். மனிதர் பலரைக் காப்பதற்காகக் கண்ணனே தங்களுக்குத் தந்த ஸ்தானம் இது. தங்கள் கர்மத்தைப் புரிவதே கீதாசாரியனுக்குச் செய்யும் ஆராதனை'' என்று தீர்க்கமாகப் பதில் கொடுத்தாள் மீரா.

அடுத்த கணம் குன்றின் பின் அவள் தலை மறைந்தது.

**''பிரேம நதிக் கரையில் ஞான நடுநிசியில் சியாமளன் தரிசனம் தருவான்''**

என்ற மதுர கானம் மட்டுமே கேட்டது!

வேள்விக்குச் சாமகானம் !

ராணு அதிவேகமாக உச்சிக்கு ஏறினான்.

மறுபுறம் காட்டாறு சுழித்துக் கொண்டு ஓடியது.

இந்த நடுநிசியில் காட்டாறே பிரேமை நதியாகி விட்டது! தரிசனம் தருபவனும், தரிசிப்பவளும் அதில் ஒன்றாகக் கரைந்து விட்டனர்.

ஆற்றின் கரையில் வந்து நின்று கொண்டு வானகத்தை வெறிக்கப் பார்த்தான் ராணு.

காலடியில் எதுவோ உரசியது.

குனிந்து எடுத்தான்.

அவன் எழுதிய தண்டனை மடல்தான் அது!

மீராவைக் குறித்து வழங்கும் பல கதைகளில் இது ஒன்று. இச்சம்பவத்தை அடிப்படையாகக் கொண்டே புகழ்பெற்ற ஐரிஷ் கவிஞரான ஜேம்ஸ் ஹெச். கஸின்ஸ் ''மன்னன் மனைவி'' (The King's Wife) என்ற கவிதா நாடகத்தைத் தந்திருக்கிறார்.

மீராவை போஜராணாவின் ராணியாகக் கருதி அவளை அக்பர் பாதுஷாவின் காலத்தில் பொருத்துகிறது இவ்வரலாறு. அவளைக் கும்பராணாவின் பத்தினியாகக் கருதுவோமாயின் அக்பருக்குப் பதில் மானவ சுல்தான் இக்கதையில் பாத்திரமாவான். சம்பவம் மாறாது — பாத்திரம் மட்டுமே மாறும்!

கண்ணனுக்கு மோகனன், மாயன் என்ற பெயர்கள் உண்டு. உலக மோகத்தை ஒழித்துத் தன்னிடமே அடியாரை மோகிக்கச் செய்பவன் அவன். உலக மாயத்தை மாய்த்து அதனுள் தன் அன்பு ஒன்றையே உண்மையாகக் காட்டுபவன் அவன். மோகமும் மாயமும் தீண்டாத அடியார்களுக்கு மீராவை ஆதரிசமாக்கியிருக்கிறார் கஸு தேசாய்.

அரசி என்ற மகத்தான பதவியின் மோகத்துக்கு ஆளாகாமல் ஆண்டியாக வாழ்ந்த மீராவைவிட — கட்டழகன் ராணுவின் தாலி கட்டிய மனைவியான போதிலும் சந்நியாசினியாக வாழ்ந்த மீராவைவிட — மோக மாயை தீண்டாதார் யாருண்டு?



# பக்கத்து வீட்டுப் பிரமுகர்

★ பத்துப் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் ஒரு நோயாளி என்ற முறையில் டாக்டர் ஹண்டேயை அறிமுகம் செய்து கொண்டார் கிருஷ்ணமூர்த்தி. அப்புறம் அவர்களிடையே நட்பு வெகு ஆரோக்கியமாக வளர்ந்தது. இப்போது பக்கத்துப் பக்கத்து வீடுகளில் டாக்டரும் வழக்கறிஞரும் வசிக்கிறார்கள். ★

இப்போதுதான் சில வருஷங்களாக அவர் நுங்கம்பாக்கத்தில் ஜாகை வசதி செய்து கொண்டு போயிருக்கிறார். அதற்குமுன் இதே டிஸ்பென்சரியில் ஒரு பகுதியில் குடும்பத்தை நடத்தி வந்தார். ஆனால் இவரைப் பொறுத்தவரை இந்த டிஸ்பென்சரிக் கட்டடம்தான் இன்றும் அவருடைய வீடு. நுங்கம்பாக்கத்துக்குச் சாப்பிடவும் படுக்கவும்தானே போகிறார்!

சென்னை நகருக்கும் இவருக்கும் ஏறத்தாழ பத்தொன்பது வருட உறவு. மருத்துவக் கல்லூரிப் படிப்பை முடித்தவுடன், இந்தப் பகுதியிலுள்ள தேவடி அம்மான் தெருவில்தான் இருபத்தி ஐந்து ரூபாய் வாடகையில் இடம் பிடித்துத் தொழிலை ஆரம்பித்தார். இவர் தகப்பனாரும் ஒரு டாக்டர்தான். சர்க்கார் சர்வீஸில் இருந்தவர். அவர் ஓய்வு பெற்றவுடன், தம்முடனேயே வந்து சேர்ந்து தொழில் நடத்தும்படி சொன்னார். இவருக்குச் சுதந்திர உணர்ச்சி அதிகம். தந்தை நிழலில் போய்த் தங்க விரும்பவில்லை இவர்.

அதிகாலையில் எழுந்துவிடும் பழக்கமுள்ளவர் இவர். ஏழு மணிக்கு டிஸ்பென்சரிக்கு வந்து விட்டால், அவரை வரவேற்கப் பல நோயாளிகள் அதற்கு முன்னால் காத்திருப்பார்கள். ஆஸ்பத்திரிப் பையன் அதற்குமுன் வந்திருப்பவர்களுக்கு, வரிசைக்கிரமத்துக்காக அடையாளச் சீட்டுக்களைக் கொடுத்து வைத்திருப்பான். தெரிந்தவர், தெரியாதவர் செல்வந்தர், ஏழை என்ற பாகுபாடுகள் குறுக்கிடாமல் இந்தச் சீட்டுகள் உதவுகின்றன. அந்த வித்தியாசம் தம் டிஸ்பென்சரிக்குள் நுழையக் கூடாது என்று தீவிரமாக நினைப்பவர் இவர்.

நண்பர்களிடமும் இப்படித்தான் வித்தியாசமில்லாமல் பழகுவார். சற்று ஓய்வு கிடைக்கும்போது நண்பர்களைக் காரில் அழைத்துக் கொண்டு வெளியே போய்விட்டு வருவதில் இவருக்கு ஒருவித மகிழ்ச்சி. சங்கீதத்தில் நல்ல ஈடுபாடு. நல்ல இசைக் கச்சேரிகளை விடமாட்டார். அவகாசம் இல்லை என்றால் மனம் வலித்துக் கொஞ்ச நேரம் கேட்டால் போதும் என்பார்.

எல்லோருடனும் சரளமாகவும் மனம் விட்டுப் பழகவும் இவருக்கு உதவுவது இவருடைய பன்மொழிப் பரிச்சயம்தான். கன்னடம், தாய்மொழி. இவர் தகப்பனார் உத்தியோகம் நிமித்தமாக, ஆந்திர, கேரள, தமிழ் மாநிலங்களில் இருந்திருக்கிறார். ஆகையால் குழந்தைப் பருவத்திலிருந்தே பிற மொழிகளைக் கற்றுக்கொள்ள இவருக்கு வாய்ப்பு இருந்தது.

இவரைத் தேடி வரும் நோயாளிகளிடம், அவர்களுடைய தாய்மொழியில் பேசுவதால், அவர்களிடமிருந்து சரியான விளக்கங்களைப் பெற முடிகிறது என்று கூறுவார். மருந்துப் பாட்டில்களின் மேல் ஒட்டப்படும் சீட்டுக்கான வாசகங்களைத் தமிழ் மொழியில் அச்சிட்டு வைத்துக் கொண்டிருப்பதை இவரிடம்தான் நான் பார்த்திருக்கிறேன். வியாதியஸ்தர்கள் பெயர்களை அவரவர்கள் தாய்மொழியில் எழுதிக் கொடுப்பதன் மூலம் ஒரே வீட்டில் மருந்துகள் மாறி உபயோகப்படுவதைத் தவிர்க்கிறார்.

இவருக்குப் பொழுதுபோக்கு என்று தனியாக ஒன்றும் இல்லை. அநேகமாக, இரவு பத்து மணி வரை டிஸ்பென்சரியில் கழிக்கும் இவருக்கு வேறு அவகாசம் ஏது? ஆனாலும், அவ்வப்போது நேரம் கிடைக்கும்







போது அரசியல், பொருளாதாரப் புத்தகங்களைப் படிப்பார். அந்த நாட்களில் மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த லட்விக் எர்ஹார்ட் எழுதிய புத்தகங்களை, பகவத்கீதையைப் பாராயணம் செய்வது போலப் படித்தாராம்.

இவருடைய தகப்பனார் நெல்லூரில் டாக்டராகப் பணியாற்றி வந்த போது இவர் நடுத்தரப் பள்ளியில் படித்து வந்தார். இவர் தகப்பனாருக்கு அத்தங்கி ராதாகிருஷ்ண மூர்த்தி என்ற பள்ளி உபாத்தியாயரைப் பற்றி நல்ல அபிப்பிராயம். அந்தக் காலத்தில் நகரசபை நிர்வாகத்திலுள்ள பள்ளிகளில் ஆசிரியரை ஒன்றிலிருந்து ஒன்றுக்கு மாற்றிக் கொண்டே இருப்பார்கள். உபாத்தியாயரை அனுசரித்து மாணவர் ஹண்டேயும் பள்ளி விட்டுப் பள்ளி மாறிக் கொண்டே இருந்தார். அந்த ஆசிரியரின் மேற்பார்வையிலேயே தம் மகன் இருக்க வேண்டும் என்று தகப்பனார் தீர்மானித்ததே காரணம்.

இவர் தொழில் ஆரம்பித்த புதிதில் வேம்பு ஐயர் என்பவருக்குச் சொந்தமான வீட்டின் ஒரு பகுதியில் வாடகைக்கு வசித்து வந்தார். வருமானம் ரொம்ப சுமார். செலவைக் கட்டுப்படுத்தப் பல இரவுகளில் உபவாசம் இருக்கவும் தம்மைத் தயாராக்கிக் கொண்டார் ஹண்டே.

ஓய்வுபெற்ற தகப்பனாரிடமிருந்து, தம் செலவுக்குக் குறிப்பிட்ட தொகைக்கு மேல் பெற்றுக் கொள்ளக் கூடாது என்ற கொள்கையினால் விளைந்த பழக்கம்.

இதைக் கவனித்த வேம்பு ஐயர் ஹண்டேயிடம் வந்து, 'டாக்டர்! எனக்கு மாதா மாதம் வாடகை கொடுக்க வேண்டும் என்ற அவசியமில்லை. நீங்கள் தொழிலில் நன்றாக ஊன்றிக் கொண்ட பிறகு, மொத்தமாக உங்களிடம் வாடகையை வாங்கிக் கொள்கிறேன்'' என்று சொல்லிப் போனார்.

அந்த மனிதாபிமானத்தை இன்றும் இவர் மறக்கவில்லை. அதை இன்றும் தம்மிடம் வரும் 'பேஷண்டு'களிடம் காண்பிக்கின்றார். பணம் இல்லை என்பதற்காக மருந்து கொடுக்காமல் இருப்பதில்லை.

பல சந்தர்ப்பங்களில் அவர்கள் வீடு திரும்ப பஸ் கட்டணத்தையும் கொடுத்தனுப்புகிறார்.

இவர் ஓர் எம். எல். ஏ.என்று தெரியுமே! சட்டசபை உள்ள நாட்களில், அங்கு போவதை எந்தக் காரணம் கொண்டும் தவிர்க்க மாட்டார். இவர் இல்லாத நேரத்தில் டிஸ்பென்சரியைக் கவனித்துக் கொள்ள வேறு டாக்டரையும் வரவழைத்து விடுவார்.

ஷெனாய் நகர் பொதுமக்கள், அவரை ஒரு டாக்டர் என்று நினைத்தே பழகுவதில்லை. ஏதோ தங்கள் குடும்பத்தைச் சேர்ந்த நபர் என்றேதான் நினைத்துப் பழகுகிறார்கள். அத்தனை உரிமை எடுத்துக் கொள்கிறார்கள்.

இரண்டு நோயாளிகளைப் பரிசோதித்து மருந்து எழுதிக் கொடுத்தால் மூன்று நபர்களுக்கு, நற்சான்றிதழ்களுக்கும், விண்ணப்பங்களுக்கும் கையெழுத்துப் போட்டுக் கொடுக்கிறார். கொஞ்சமாவது முகத்தைச் சுளிக்க வேண்டுமே!

ஒரு கலகலப்பான நண்பர், கருணையுள்ள டாக்டர், கண்ணியமான அரசியல்வாதி மூவரும் சேர்ந்த ஹண்டே அவர்களைப் பக்கத்து வீட்டுக்காரராக அடைந்ததில் பெருமைப் படுகிறேன். —பேட்டி: கோமதிசுவாமிநாதன்

---

விரிவுபடுத்தப்பட்ட தமிழ்நாடு அமைச்சரவையில் இடம் பெற்றிருக்கும் தொழிலாளர் அமைச்சர் வேழவேந்தன் அவர்கள், ராஜாஜி அவர்களிடம் தாம் மந்திரியான செய்தி கேட்ட பின், ஆசிபெறச் சென்றிருந்தார். முப்பது வயது இளைஞரான அமைச்சருக்கு மூதறிஞர் ராஜாஜி ஆசி வழங்கிவிட்டு, "இந்தத் தடவை கலைஞர் கருணாநிதி அவர்கள் மூன்று செயல் வீரர்களைப் பொறுக்கி யெடுத்து மந்திரியாக்கி யிருக்கிறார். மூவரும் நல்ல செயலாளர்கள்!'' என்று கூறினார். செயல் வீரர்களாகத் திகழும் செயலாளர்கள் என்பதற்கு ராஜாஜி அவர்கள் தந்த விளக்கம்: 1. பொதுச் செயலாளர், 2. அமைப்புச் செயலாளர், 3. சட்டமன்றக் கட்சிச் செயலாளர்!

இருவாளர்கள் நெடுஞ்செழியன், என். வி. நடராஜன், கா. வேழவேந்தன் ஆகிய மூவருமே செயலாளர்கள்தாமே!

— அமைச்சர் வேழவேந்தனிடம் கேட்டு எழுதியவர்: ஐ. எம். எஸ்.



ஆசி பெறச் சென்ற இவரிடம் ராஜாஜி சொன்னது என்ன?





# வேஷங்கள்

## அத்தியாயம் 6

சங்கரன் நன்றாகத் தேறி மறுபடியும் ஆபீஸ் போக ஆரம்பித்தான். ஒரு நாள் ரமணி திடீரென்று அவன் அறைக்குள் நுழைந்தான்.

''இப்போ உங்களுக்கு நல்லா தேவலையில்லையா ?'' என்று கேட்டான் ரமணி.

''தேவலை... தாங்க்ஸ்...''

''ஐ ஆம் ஸாரி.... இப்போல்லாம் எனக்கு நேரம் கிடைக்கிறதே இல்லே! ஆபீஸ் வேலை மட்டுமல்ல, அப்புறம் இந்தப் பொதுக் காரியங்கள் வேறே... ஒரே 'நியூஸென்ஸா'ப் போச்சு... ஸோ யூ ஆர் ஆல்ரைட்....''

சங்கரன் பதில் கூறவில்லை. குனிந்து 'ஷு'வுக்குப் 'பாலிஷ்' ஏற்றிக்கொண்டிருந்தான்.

''உங்களுக்குக் 'கதக்'கிலே 'இன்டெரெஸ்ட்' உண்டா ?''

''இல்லே....''

''வாட் எ பிட்டி!... உஸ்தாத் ஒருத்தன் இருக்கான்னேனே, அவன் தங்கை இன்னிக்கு 'கம்யூனிட்டி ஹால்'லே ஆடறா... வந்தீங்கனா போகலாம்.... அஃப்கோர்ஸ் டாக்ஸியிலே போகலாம்....''

''நான் எதுக்கு?... ஃபாமிலியோட போங்க நீங்க....''

ரமணி திரும்பிப் பார்த்தான். பிறகு கோபத்துடன் சொன்னான். ''ஃபாமிலி... ஐ ஹாவ் நோ ஃபாமிலி. நீங்கதான் இங்கே இருக்கீங்களே, இத்தனை நாளா, தெரிஞ்சிருக்குமே..''

''என்ன தெரிஞ்சிருக்கும்...?''

ரமணி நாற்காலியில் உட்கார்ந்தான். ''நீங்க நிறைய படிச்சவர், சொல்லுங்கோ... ஆம் ஐ ஃப்ரம் தி கட்டர்?... அப்படித்தான் அவன் நினைக்கிறான், ஏதோ நான் சாக்கடையில் விழுந்துவிட்ட மாதிரி....''

அவன் குரல் உணர்ச்சிவயப்பட்டிருந்தது. ரமணியின் உள்ளுக்குள்ளிருந்து ஏதோ முண்டியடித்துக் கொண்டு எழுந்து, பரிதாபமாக ஓலமிடுவது போலிருந்தது. அவன் திடீரென்று இவ்வாறு தன்னிடம் வந்து பேசுவான் என்று சங்கரன் எதிர்பார்க்கவில்லை. எதற்காகத் தன்னிடம் இதைக் கூறுகிறான்? 'நீங்க நிறைய படிச்சவர்' என்று சொல்லக் காரணம்?

''ஆம் ஐ ஃப்ரம் தி கட்டர், சொல்லுங்கோ....?'' ரமணியின் குரல் ஓங்கியது.

''நீங்க இப்படிப் பேசறது, எனக்கு ரொம்பச் சங்கடமா இருக்கு....'' என்றான் சங்கரன்.

''எனக்கு அப்பா கிடையாது. அம்மாதான்.... இன்னொண்ணு சொல்லட்டுமா ? எனக்கு அப்பா யாருன்னு தெரியாது. சின்ன வயசிலிருந்தே அப்பா யாருன்னு தெரியாத பிள்ளை.... நீங்க ஊனமாயிருக்கலாம், ஆனால்



# இந்திரா பார்த்தசாரதி

உங்களுக்கு அப்பா யாருன்னு தெரியும்..... இல்லியா....?''

அவன் நன்றாகக் குடித்துவிட்டு வந்திருக்கிறான் என்று சங்கரன் உணர்ந்தான். அவனுடன் பேசுவதில் பயனில்லை.

''சின்ன வயசிலே ஒவ்வொருத்தரும் என்னைச் கட்டிச் கட்டிக் காட்டுவாங்க, 'அப்பா தெரியாத பிள்ளை'ன்னு... நான் யாருக்காக அநுதாபப்படணும் சொல்லுங்கோ, என் முதுகைப் பார்த்துச் சிரிச்சவங்ககிட்டேயா ?.... நான் பொய் சொல்றேன், ஏமாத்தறேன், வேஷம் போடறேன்..... இதுதான் இந்தச் சமூகம் எனக்குச் சொல்லிக் கொடுத்த வாழ்க்கை தர்மம்.... பொய் சொல்லித்தான் கல்யாணம் பண்ணிண்டேன். புஸ்தகங்களையெல்லாம் கரைச்சுக் குடிச்ச, சோடா பாட்டில் கண்ணாடி ப்ரொபஸர் பெண்ணை, நான் பெரிய மனுஷன்னு சொல்லி ஏமாத்திக் கல்யாணம் பண்ணிண்டேன்.... இப்போ நான் 'அப்பா தெரியாத பிள்ளை'. உள்ளே யிருக்கே, அவலட்சணமா என் பிள்ளை....? ஐ ஹேட் ஹெர், ஐ ஹேட் ஹிம்... ஐ ஹேட் எவ்வரி திங்.''

சிவப்பேறிய அவன் கண்களைக் கண்டு சங்கரன் பயந்து விட்டான்.

''நான் ஆபீஸ் போகணும்....'' என்று அவன் எழுந்திருந்தான்.

''நான் பேசறது உங்களுக்குப் பிடிக்கல்லே, அப்படித்தானே...? நீங்களும் படிச்சவர், அப்பா யாருன்னு தெரிஞ்சவர், ஆனால் நொண்டி, வாட் எ பிட்டி....'' என்று அவன் சிரிக்கத் தொடங்கினான்.

சங்கரன் பாண்டை எடுத்து மாட்டிக் கொண்டான்.

''ஐ ஆம் ஸாரி... நான் ரொம்ப 'ரூட் ஃபெல்லோ'... இங்கிதம் தெரியாதவன். என்னை மன்னிச்சுக்கோங்க.'' அவன் எழுந்து குனிந்து சங்கரன் கால்களைத் தொட்டான்.

''மிஸ்டர் ரமணி...ப்ளீஸ்... போய்ப் படுத்துக்கோங்க....'' என்று சங்கரன் அவன் கையைப் பற்றி நிமிர்த்தினான்.

ரமணியின் உடம்பு தள்ளாடியது. சங்கரன் அவனை உள்ளே அழைத்துக் கொண்டு போய்ப் படுக்க வைத்தான். ரமணியின் கண்கள் தாமாகவே மூடிக் கொண்டன.

சங்கரன் தன் அறைக்கு மீண்டும் வந்து, வெளியே புறப்படுவதற்குத் தயாரானான்.

கோபு கதவருகே நின்று கொண்டிருந்தான். அவன் உடம்பு முழுதும் கண்களாகச் சங்கரனைப் பார்த்தான்.

சங்கரன் அவனுடன் ஒன்றும் பேசவில்லை.

''அவர் உளறினதையெல்லாம் நம்ப வேண்டாம்'' என்றான் கோபு.

சங்கரனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அப்பாவின் மீது வெறுப்பு இருந்தாலும், இந்தப் பையனுக்குக் குடும்பப் பெயரின் மீது எவ்வளவு அக்கறை ?

''நான் நம்பலே....''

சங்கரன் கையில் பூட்டை எடுத்து வைத்துக் கொண்டான்.

''ஸ்கூலுக்குப் போகலையா ?''

''ஆமாம்.....''

அவன் வாசலுக்கு வந்த போது ரமணியின் மனைவி நின்று கொண்டிருந்தாள். அவள் எங்கோ, மிகத் தொலைவில், அடிவானத்துக்கு அப்பால் பார்த்துக் கொண்டிருந்தாள். முகத்தில் எந்தவித உணர்ச்சியுமில்லை.

சங்கரன் சிறிது நேரம் அவள் அருகே நின்றான். அவள் அவன் பக்கம் திரும்பவேயில்லை.

ரமணி சொன்னதையெல்லாம் அவளும் கேட்டிருக்க வேண்டும். இது அதன் விளைவுதானோ ?

''நான் வரேன்....'' என்றான் சங்கரன்.

அவன் பக்கம் அவள் திரும்பி இலேசாகப் புன்னகை செய்தாள். ''நான் கோபு இல்லே.... என்கிட்டே

யும் அவர் சொன்னதை 'நான் நம்பலே'ன்னு சொல்ல வேண்டாம்.''

''நான் அப்படிச் சொல்லப் போறேன்னு நீங்களா நினைச்சேளா?''

''இல்லே... உங்களுக்கு அநுதாப உணர்ச்சி அதிகம்னு எனக்குத் தெரியும்....''

''அவர் எப்போதும் இப்படித்தானா?''

''நான் அதைப் பத்திப் பேசப் போறதில்லே.....''

கோபு அப்பொழுது வெளியே வந்தான். அவன் அம்மா உள்ளே போய் விட்டாள்.

அன்று 'உணவு வேளை'யின் போது சங்கரன் சுந்தரத்தைச் சந்தித்தான். காலையில் நடந்த நிகழ்ச்சியை அவனிடம் சொன்னான்.

''போடா, 'முட்டாள்'...! அந்த வீட்டை விட்டு வாடான்னா வர மாட்டேங்கிறியே.... அந்த வீட்டிலே ஒவ்வொருத்தரும் ஒரு மாதிரியான 'ஃபிரீக்'.... சத்தியமா சொல்லு, நீ அங்கே சந்தோஷமா இருக்கியா?''

''அங்கே என்ன, எங்கேயுமே நான் சந்தோஷமா இல்லே....''

''அது வேறே பிரச்னை.... சந்தோஷம்னா என்னங்கிற தத்துவ ஆராய்ச்சி வேண்டாம்.... இப்பொ என்கிட்டே இதை எதுக்குச் சொன்னே?.... அதைச் சொல்லு...''

''ரமணியையும் அவன் இப்படி இருக்கிறதுக்கு என்ன காரணம்னு புரிஞ்சுக்க இடமிருக்குங்கிறேன்....''

''ஒவ்வொருத்தரையும் அப்படிப் புரிஞ்சுக்கப் பார்த்தால், உலகத்திலே கோபம், தாபம், பாசம், வெறுப்பு இதுகளுக்கெல்லாம் அர்த்தமேயில்லே.''

''எதுக்காக இருக்கணும்?''

''நீ மனுஷங்கிற காரணத்தினாலே. இராவணனைப் புரிஞ்சுண்டு, இராமன் வில்லை வளைக்காமெ இருந்தானா? அல்லது கொலைகாரனைப் புரிஞ்சுண்டு அவனைத் தூக்கிலே போடாமெ இருக்காளா....?''

''ஏண்டா 'அகெடமிக்'காப் பேசினா, இப்படிக் கோபப்படறே?''

''யாருமே ஒரு குறிப்பிட்ட விவகாரத்திலே சம்பந்தப்படாத வரையில், 'அகெடமிக்கா'ப் பேசலாம்... நீ அந்த வீட்டிலேயே இருக்கே.... அந்த வீட்டை விட்டு வெளியிலே வா, ரமணியோட 'கேஸ் ஹிஸ்டரி'யை அப்புறம் ஆராய்ச்சி பண்ணுவோம்.''

''இதுக்குத்தான் வேஷம்னு பேரு.''

''அது கிடக்கட்டும், வேஷம் போடாதவா யாரு? நீ எதுக்காக அந்த வீட்டிலே ஒட்டிண்டிருக்கே? வாட் ஈஸ் யுவர் இன்டெரஸ்ட்?''

''கோபு....''

''மிஸ்டர் சங்கரன்.... நான் நேத்திக்குப் பொறந்தவன் இல்லே.... உன் பேரிலே இருக்கிற அக்கறையிலே சொல்றேன், ஜாக்கிரதையா இரு....''

சங்கரன் அவனைக் கூர்ந்து நோக்கினான். 'ஜாக்கிரதையா இரு'.... இன்னும் யாரோ 'ஜாக்கிரதை'யைப் பற்றிப் பேசினார்களே....! அன்று அவன் ரமணியின் மனைவியிடம் சொன்னான். ''நீங்க பெரிய மைன்ட்-ரீடர்'னு நினைக்கிறேன்....'' அதற்கு அவள் பதில் கூறினாள்: ''அப்படியானால் நீங்க ரொம்ப ஜாக்கிரதையாப் பேசணும்......''

''என்னடா யோசிக்கிறே?''

''அன்னிக்கு ரமணியோட பெண்டாட்டிகூட இதைத்தான் சொன்னாள். அது ஞாபகம் வந்தது.....''

''எந்தச் சந்தர்ப்பத்திலேன்னு நான் உன்னைக் கேட்கப் போறதில்லே....''

''அசடு வழியாதே! சரி நாழியாறது, நான் வரேன்......''

அன்று சாயந்திரம் அவன் வீட்டுக்குத் திரும்பிய போது ரமணி வீட்டிலில்லை. மூன்று மணிக்கு எழுந்தானும். குளித்து விட்டுப் போய் விட்டான். 'கதக்' நடனம் 'கம்யூனிட்டி ஹா'வில் நடக்கும் போது அதுவும் அந்தப் பெண், — அவன் ஆருயிர் நண்பன் உஸ்தாத்தின் தங்கை — நடனமாடும்போது அவனால் எப்படி வீட்டில் இருக்க முடியும்? இவனால் எவ்வாறு விருப்பப்படி ஆபீசுக்குப் போய் வர முடிகிறது? கேள்வி முறையில்லையா? அவனே ஒரு தரம் சொன்னது சங்கரன் நினைவுக்கு வந்தது. ''மூன்று மந்திரிகள் என் கைப் பையில் அடக்கம்.... அவர்களுடைய பூர்வோத்தரம் எனக்கு அத்துப்படி....'' அது வெறும் வாய்ச் சவடாலா? அல்லது உண்மையாக இருக்குமா....?

கோபு காப்பி கொண்டு வந்து கொடுத்தான். இப்பொழுதெல்லாம் அவன் அதை மறுப்பதில்லை.

ரமணியின் மனைவி அவன் அறைக்குள் வந்தாள்.

''அவர் எங்கே போயிருக்கார், தெரியுமா?'' என்று அவள் கேட்டாள்.

''தெரியும்....''

''அவர் உங்கள் அநுதாபத்துக்குரியவராகி விட்டார், இல்லியா?''

''என் அநுதாபம் உலகத்தில் பெரிய விஷயமல்ல....''

''அதை நீங்கள் உணர்ந்தால் சரி.''

அவன் அவளை ஏறிட்டு நோக்கினான்.

# தீவிரமாகச் செயல்புரிவது




# தடவ இதமானது

# ஜலதோஷத்திற்கு ரபெக்ஸ்

மார்பில் சளியின் அடைப்பை அகற்ற—முதுகிலும் மார்பிலும், மூக்கைச் சுற்றியும், மூக்கிற்குள்ளும், நெற்றியிலும் ரபெக்ஸ் தடவுங்கள். மூக்கடைப்பைப் போக்க, இதமான அதன் ஆவியை முகருங்கள்.

**இப்பொழுது 3 பாக்கிங்குகளில் கிடைக்கிறது**
65 கிராம் மற்றும் 20 கிராம் ஜாடிகள், 6 கிராம் டின்.

**ஒரு ஜாடி அல்லது டின் எப்பொழுதும் கைவசம் இருக்கட்டும்.**

அலெம்பிக்கின் ஹேம்ப்ரோ பிரிவின் தயாரிப்பு




**ரபெக்ஸ்: தீவிரச்செயல் புரியும், இதமான ஜலதோஷ நிவாரணி.**

everest/614a/ACW ta

''எதுக்காக இப்படிச் சொல்றேள்?''

'' உலகத்திலே எதுதான் பெரிய விஷயம் ?''

''நம்பிக்கை.... அதாவது பரஸ்பர நம்பிக்கை....''

''பரஸ்பரமாக இல்லாவிட்டால்?'' என்று அவள் கேட்டாள்.

கோபு கேட்டான்: ''மாமா! பார்க் போகலாம், வரேளா?''

''போகலாம்...'' என்றான் சங்கரன்.

''நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியலியா ?'' என்றாள் ரமணியின் மனைவி.

''எனக்குப் பதில் சொல்லத் தெரியும்னு உங்களுக்குத் தெரியும்....''

'' நீங்க சொல்றது எனக்குப் புரியலே.......''

''புரியலியா, அல்லது புரியாமெ இருக்கிற மாதிரி இருந்தாலும் சரி.... இந்த விஷயம் இங்கேதான் முடியற துன்னு நினைக்கிறேன்......''

''என்ன புதிர் போடறேளா ?''

''புதிர் புதிரா இருந்தால்தான், இதுக்கு ஒரு மதிப்பு இருக்கு.... 'அட்லீஸ்ட் சஸ்பென்ஸ் வால்யூ'.''

''மாமா! போகலாமா?'' என்று சங்கரனைக் கிளப்பினான் கோபு.

''கோபு.... பேசற போது ஏன் தொந்தரவு பண்ணறே?'' என்றாள் அவன் தாயார்.

''நீங்க பேசறது எனக்குப் புரியலே'' என்றான் கோபு.

''எங்களுக்கே புரியலே....'' என்றான் சங்கரன். மூவரும் சிரித்தார்கள்.

''சரி... நீ போய் 'ட்ரெஸ்' பண்ணிண்டு வா..... மாமா வருவார்....'' என்றாள் ரமணியின் மனைவி.

கோபு உள்ளே போனான்.

'' எனக்கு இந்த வீட்டை விட்டுப் போறதுதான் நல்லதுன்னு படறது..''

''யாரு ?''

அவன் திடுக்கிட்டான். அவள் ஒன்றுமறியாதவள் போல் மறுபடியும் கேட்டாள்: ''யாரு, நீங்களா ?''

''ஆமாம்...'' அவன் குரல் பலவீன மாக இருந்தது.

''இப்படி எதுக்காக நீங்க அடிக்கடி பயமுறுத்தறேள் ?''

''நான் பயமுறுத்தலே...திடீர்னு ஒரு நாளைக்குப் போகத்தான் போறேன்....''

கோபு வந்தான். ''மாமா! காலி பண்ணிண்டு போகப் போறாளாம்...'' என்றாள் அவன் அம்மா.

''ஏன் மாமா....?''

''உங்கப்பா உன்னே அடிக்கிறார்.... என்னாலே தடுக்க முடியலே... இதைச் சகிச்சுண்டு என்னாலே இங்கே இருக்க முடியாது......''



'' தினமும் நீங்க ஆபீசுக்கு என்ன டிபன் கொண்டு போகிறீர்கள் ?''

'' ஆபீசிலே ஒருத்தருக்கும் பிடிக்காத டிபனு பார்த்துக் கொண்டு போவேன் !''

கோபு அவன் கைகளைப் பற்றிக் கொண்டான். ''வேண்டாம், மாமா ! ப்ளீஸ்... முன்னெல்லாம் எங்கப்பா அடிச்சாரு, எனக்கு 'அவரைக் கொலை பண்ணு' என்னன்னு கோபம் வரும், இப்போ வல்லே.... நீங்க இருக்கிறதே எனக்கு ஆறுதல்....''

''என்ன ஆறுதல்?''

''சத்தியமா சொல்றேன் மாமா. நீங்க நம்பினா நம்புங்கோ, இல்லாட்டா என்னைப் பைத்தியம்னு வேண்டுமானால் நினைச்சுக்கோங்கோ.... எனக்கு இதுவரை ஒரு தெய்வம்தான். அதான் அம்மா. இப்போ இரண்டு தெய்வம், இன்னொண்ணு நீங்க....''

சங்கரன் கோபுவின் அம்மாவைப் பார்த்தான். அவளும் அச்சமயம் அவனைப் பார்த்தாள். இருவர் பார்வை யிலும் இமைப்பின் நிழல் தட்டியது.

''யாரையும் தெய்வமாக்கிறது பைத் தியக்காரத்தனம்...''என்றான் சங்கரன்.

'' தெய்வம் தன்னைத் தெய்வம்னு சொல்லிக்குமா?'' என்றான் கோபு.

''தெய்வம்னா என்ன அர்த்தம்?'' என்று கேட்டாள் கோபுவின் அம்மா.

''கெட்டவாளா இல்லாமெ நல்ல வாளா இருந்தா தெய்வம்....''

சங்கரன் சிரித்தான் ''அதுக்குள்ளே இந்த வயசிலே, உன்னாலே யாரு நல் லவா, யாரு கெட்டவான்னு சொல்ல முடியுமா ?''

''ஓ, எஸ்.... எங்கப்பா கெட்டவர். அவர் சிநேகிதாள்ளாம் கெட்டவா.... உஸ்தாத் — அவன் மீசையும் அவனும் — அவரோட பேஹனஜி எல்லாரும் கெட்டவா.....''

''அவனோட 'பேஹன்ஜி'யா....?'' என்று கேட்டான் சங்கரன்.

''ஆமாம்.... 'கதக்' டான்ஸர்....'' என்றாள் கோபுவின் அம்மா.

''நீ பார்த்திருக்கியா அவளை ?'' என்று கோபுவை வினவினான் சங்கரன்.

''பார்த்திருக்கேன்... ஆம்பிளேக்குப் பொம்மனாட்டி வேஷம் போட்ட மாதிரி இருப்பாள்.... இங்கே வந்திருக்கா.''

''கோபு!'' என்று இலேசாகக் கண் டித்தாள் அவன் அம்மா.

''கோபுவுக்குக் கதை எழுதற சாமர்த் தியம் நிச்சயமா இருக்கு.... பாருங்க ளேன், அவனுக்கு என்னென்ன, தோணறது ?'' என்றான் சங்கரன்.

''நீங்க கதை எழுதுவேளா மாமா?''

''தெரியாது... ஒரு நாளைக்கு என் கதையைச் சொல்றேன், நீ எழுது....''

''இன்டெரஸ்டிங்கா இருக்குமா ?'' என்று கேட்டாள் ரமணியின் மனைவி.

''ஒரு சராசரி மனுஷன் வாழ்க்கை யிலே என்ன இன்டெரஸ்டிங்கா இருக் கப் போறது?... பாரதியார் பாட்டு ஒண்ணு ஞாபகம் வரது.....''

''என்ன பாட்டு?'' என்று கேட் டாள், கோபுவின் அம்மா.

சங்கரன் சிறிது நேரம் பேசாமல் இருந்தான். ''என்ன பாட்டு மாமா?'' என்று கோபு கேட்டான்.

''எனக்கு இது ரொம்பப் பிடிச்ச பாட்டு. ஏன்னா, நான் இதிலே, பாரதியார் சொல்ற மாதிரியே இருக் கேன்..... பாட்டு என்னன்னா....

> '' தேடிச் சோறுநிதந் தின்று - பல
> சின்னஞ்சிறு கதைகள் பேசி - மனம்
>
> வாடித் துன்பமிக உழன்று - பிறர்
> வாடப் பல செயல்கள் செய்து - நரை
>
> கூடிக் கிழப் பருவமெய்தி - கொடுங்
> கூற்றுக் கிரையெனப்பின் மாயும் - பல
>
> வேடிக்கை மனிதரைப் போலே...''

இன்னும் பாட்டு இருக்கு... நான் தான் இதிலே வர வேடிக்கை மனிதன், சராசரி மனிதன்....''

'' பாரதியார் என்ன செய்யணுங் கிறார் ?'' என்றாள் கோபுவின் தாயார்.

''அதைப் பத்தி நான் கவலைப்படலே. என்னைப் பத்திப் பாடியிருக்கார், அதுதான் முக்கியம்.... கோபு என்னைக் கதாநாயகனா வைச்சுக் கதை எழுதி னான்னா, அதுதான் ஜனநாயகத்துக்கும் ஏத்த விஷயம்......''

''நீங்க சராசரி மனுஷனில்லே...'' என்றாள் ரமணியின் மனைவி.

''ஏன் அப்படிச் சொல்றேள்?''

'' சராசரி மனுஷனுக்குத் தான் சராசரி மனுஷன்னே தெரியாது. அதைப் பத்திச் சொல்லிண்டும் திரிய மாட்டான்.....''

''உங்களுக்குப் பாடத் தெரியுமா, மாமா?'' என்று கேட்டான் கோபு.

'' 'பல பண்ணிற் கோடி வகை இன்பம், நான் பாடத் திறனடைதல் வேண்டும்'னு சொல்லத் தெரியும்....''

'' கோபு பாடுவான் '' என்றாள் அவன் அம்மா.

''அப்படியா? எனக்குத் தெரியாதே. எங்கே பாடு '' என்றான் சங்கரன்.

''இல்லே மாமா, சும்மா சொல்றா'' என்று வெட்கத்தில் முகஞ் சிவக்கக் கூறினான் கோபு.

''கோபு... பாடு...'' அவன் அன்னை யின் குரல் அவனை உற்சாகப்படுத்தியது.

கோபு பாட ஆரம்பித்தான்.... 'ஸ்ரீரங்கபுர விஹார' என்ற தீட்சிதர் கிருதி. சங்கரன் பிரமித்து உட்கார்ந் திருந்தான்.

'மின்னற் கவைதான் மெலிதாய், மிக இனிதாய்' எங்கும் பரவியது. இயற்கை இப்படியொரு குரலையும், கற்பனையையும் இந்தப் பையனுக்குக் கொடுத்துவிட்டு, உடம்பைப் பொறுத்த வரையில் ஏன் வஞ்சிக்க வேண்டும் ? குரல் தேனாகப் பாய்ந்து, காலத்தை யும், உலகத்தில் வேறு எந்தப் பொரு ளின் அர்த்தத்தையும், அந்தக் கணத் தில் தன்னுள் கரைத்து, தான் அதில் கரைந்து, சுத்த இன்பமாகப் பெருகி, உடம்பை மெய்சிலிர்க்கச் செய்தது.

பாட்டு நின்றது. சங்கரன் கண் களைத் திறந்தான்.

''எப்படிப் பாடறான் ?''

சங்கரன் கைக்குட்டையினால் கண் களைத் துடைத்துக் கொண்டான். ''இதுதான் பதில்.....''

''இவன் அப்பாவும் பாடுவார் !''

''என்னது ?.... ரமணியா ?''

'' ஆமாம்... எனக்குப் பாட்டு வராது..... அவா ரஸிக்கத் தெரியும்.''

''மிஸ்டர் ரமணிக்குப் பாடத் தெரிந் துமா....?''

அப்பொழுது வாசலில் ஒரு ஸ்கூட்டர் வந்து நின்றது. யாரோ ஒருவன் வந்து வாசலில் நின்றான்.

கோபுவும் அவன் தாயும் அறை வழியே வாசலுக்குப் போனார்கள்.

''மிஸஸ் ரமணி...'' என்று இழுத் தான் அவன்.

''ஆமாம், நான்தான்.....''

''மிஸ்டர் ரமணி நாளை காலம்பறத் தான் வருவார். கூட அஞ்சாறு பேர் வராளாம்.... சமையல் பண்ணி வைக் கச் சொன்னார்.....''

அப்பொழுது கோபுவின் முகம் சிவந்தது. இந்தப் பையனா அவ்வளவு இனிமையாக அப்பொழுது பாடினான் ?

(தொடரும்)

# தீராத விளையாட்டு

குடு.அழகிரிசாமி

## அத்தியாயம் 1

சாத்தூரிலிருந்து மதுரைக்குத் திரும்பிய ரங்கராஜன், அவன் வரையிலும் சரி, மற்றவர்களின் பார்வையிலும் சரி, முற்றிலும் ஒரு புதிய மனிதனாகவே மாறியிருந்தான். அவன் முகத்தில் இப்போது பால் வடியவில்லை. சாந்தி தவழ்ந்து கொண்டிருந்த அந்த முகத்தில் இப்போது சூனியமும் வறட்சியுமே தென்பட்டன. மதுரைக்கு ரயில் ஏறுவதற்கு முன் அருணசல முதலியார் அவனுக்கு உபதேச ரூபத்தில் செய்த எச்சரிக்கைகள் அவனுக்கு ஒருவித வெறியையும் வேகத்தையும் உண்டு பண்ணி விட்டன. அப்பாவைப் பார்த்தான். வழக்கம்போல் எதுவும் பேசவில்லை. அம்மாவைப் பார்த்தான். அவளுடனும் அவன் பேச விரும்பவில்லை. ஆனால் வெறியும் வேகமும் அவளுடைய தரிசனத்தில் சற்றே தணிந்தன. அப்புறம் விஜயாவையும் பார்த்தான். அவளோடு பேசுவதற்கும் அவனுக்கு விருப்பம் உண்டாகவில்லை. பேச விரும்பவில்லை என்றாலும் ஒன்றைச் சொல்ல விரும்பினான். தன் வீட்டிலேயே அவளைத் தனியாகச் சந்தித்தபோது அவன் சொல்லியும் விட்டான்.

''விஜயா! ஒரு வாரத்துக்குப் பிறகுதான் உன்னை வந்து பார்க்கணும், பார்த்துப் பேசணும்னு இருக்கிறேன். இப்போ நான் பேச மாட்டேன். நாம்ப அப்போ பேசுவமே...''

அவள் திகைத்துப் பார்த்தான். எத்தனையோ திகைப்புக்கள். பேசுவதற்கு முன் ஒரு வார அவகாசம் எதற்கு? இந்த ஒரு வாரத்தில் என்னென்ன தடங்கல்கள் இருக்கின்றன? ஒரு வாரத்துக்குப் பிறகு அவன் பேசப் போகும் பேச்சில் என்னென்ன வெளிப்படப் போகின்றன?... 'நாம்ப அப்போ பேசுவமே' என்றால், அதுவரையிலும் அவள் அவன் வீட்டுக்கு வரக்கூடாது என்றும், வந்தாலும் பேசக் கூடாது என்றும் அர்த்தமா?

அவளுடைய திகைப்புக்களையெல்லாம் அவன் சுலபமாக யூகித்துக் கொண்டு விட்டான். ஒரு வார காலமும் அவள் மன அமைதி இழந்து இருக்கவேண்டாம் என்பதற்கு மன அமைதி பெறுவதற்குக் கொடுக்கும் ஒரு மருந்தைப் போல், ஒரு தடவை இலேசாகச் சிரித்தான். அந்தச் சிரிப்பில் நிர்ப்பந்த உணர்ச்சியும் இருந்தது, வேதனையும் இருந்தது.

'இப்படிப்பட்டவரின் மனசையும், இந்த மாதிரி நோகச் செய்கிறவர்கள் யாரோ இருக்கிறார்களே — இந்தக் கொடிய உலகத்தில்.'

விஜயா அவனிடம் கரைகடந்த அநுதாபமே கொண்டாள்.

''நான் கடிதாசில் எழுதியிருந்ததை மறந்திருக்க மாட்டீங்க. ஒரு வாரமில்லே. எத்தனை யுகங்கள் வேணும்னாலும் காத்திருப்பேன்.



நீங்க மட்டும் மனசைக் கஷ்டப்படுத்திக்காதீங்க. இந்த ஒரு வாரமும் நான் உங்களைப் பார்க்க வரலே. அதைத் தானே சொல்ல வர்றீங்க?''

''விஜயா!...''

ரங்கராஜனின் கண்கள் நனைந்தன. நீண்ட இமைகள் நனைந்து கனத்தன.

'' நான் வர்றேன் ..... '' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டு விட்டாள். போகும்போதே ஒரு தடவை திரும்பிப் பார்த்தாள்.

''மனசைக் கஷ்டப்படுத்திக்காதீங்க'' என்று திரும்பவும் தழுதழுத்த குரலில் சொல்லிவிட்டு அவள் மாடிப் படிகளில் இறங்கினாள்.

ரங்கராஜன் பின்தொடராமல் அவளையே பார்த்துக் கொண்டு நின்றான். விஜயாவின் காலடி ஓசை கேட்டது. ஒவ்வொரு தடவையும் நீண்ட இடைவெளி விட்டு அடியெடுத்து வைத்து அவள் நடக்கும்போது கேட்ட ஓசை குறைந்து கொண்டே போய் நின்று விட்டது.

ரங்கராஜன் கண்ணீரை அடக்கினான். 'அழுவதிலும் அர்த்தமில்லை; கவலைப்பட்டுப் பிரலாபித்துக் கொண்டிருப்பதிலும் அர்த்தமில்லை. இரண்டுமே பிரயோசனமில்லாத காரியங்கள். ஒரு துரும்பைக்கூட அசைக்க முடியாத வீண் வேலைகள்.'

சட்டென்று திரும்பித் தன் அறைக்குள் போய்ப் படுத்தான். அவன் யாரை முதலில் போய்ப் பார்க்க வேண்டும் என்று சாத்தூரிலிருந்து திரும்பியதும் நினைத்தானோ, அவரை அன்று சாயங்காலமே போய்ப் பார்த்தான். அவரை விஜயாவின் தந்தையாக அப்போது அவன் நினைக்கவில்லை. தனக்கும் தன்னைப் போன்ற யாருக்கும், தோன்றியோ தோன்றாமலோ துணை நிற்கும் ஒரு 'மனித'ராகவே கருதினான்.

**மா**லை ஐந்து மணி இருக்கும். ஆர். கே. ராமலிங்கம் சற்றும் எதிர்பாராத நிலையில் அவருடைய ஆபீஸ் அறையில் போய் நின்றான் ரங்கராஜன். அவர் பரபரப்பைக் கொஞ்சமும் காட்டிக் கொள்ளாமல், பதில் வணக்கம் செய்து விட்டு

## இரண்டாம் பாகம்



# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**




புதிய, நவீன காஸ்மெடிக் டின்!

எடுப்பான புதிய டின்!




மற்றும் பாமாலிவ் டால்க் டிலக்ஸ் — மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை

FT.C 8 TAM.

அவனை உட்காரச் சொன்னார். முகத்தில் தோன்றிய அற்ப சொற்பமான புன்னகை க்ஷண நேரத்தில் மறைந்து விட்டது. வீட்டில் அவர் நடந்து கொண்ட விதமும் இங்கே நடந்து கொள்வதும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் வேறுபட்டு இருப்பதைப் பார்த்த ரங்கராஜன் அதற்காகக் கவலையோ குழப்பமோ அடையவில்லை. அவனுடைய மன நிலையில் உபசார சம்பிரதாயங்கள் இல்லாமல் இருப்பதையே அப்போது விரும்பினான். அவர் எப்படி நடந்து கொண்டாலும் அவருடைய மன இயல்பு மாறவே மாறாது என்பதில் அவனுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. 'சங்கு சுட்டாலும் வெண்மை தரும்!'

"உங்களோடு தனியாகக் கொஞ்சம் பேசலாம்னு வந்தேன். உங்களுக்கு அவகாசம் இருக்குமோ என்னவோ?"

"அவகாசத்தை உண்டுபண்ணிக்க வேண்டியதுதான். என்ன பிரமாதம்?" என்று சொல்லிவிட்டு மற்றொரு தடவை புன்னகை செய்தார். அடுத்த நிமிஷமே எழுந்து விட்டார்.

"வாருங்கள், போகலாம்" என்று அவனை அழைத்தார்.

"வீட்டுக்கா?" என்று கேட்டான் ரங்கராஜன்.

"வீட்டுக்கும் போகலாம். தப்பு ஒண்ணுமில்லே. இப்போ வெளியிலே போவோமே!"

அவனைக் காருக்கு அழைத்துக் கொண்டு வந்தார். இருவரும் வண்டியில் ஏறிக் கொண்டனர். டிரைவர் 'எங்கே?' என்று கேட்கும் முறையில் திரும்பிப் பார்த்தான்.

"ரேஸ் கோர்ஸுக்குப் போ."

கார் புறப்பட்டது. தெருக்களைச் சுற்றி, வைகைப் பாலத்தைத் தாண்டி, நகரின் எல்லையையும் கடந்து ஒரு மைதானத்தில் கட்டளையை எதிர் பார்த்துச் சாவதானமாகப் போய்க் கொண்டிருந்தபோது, 'போதும்' என்று சொல்லிக் காரை நிறுத்திவிட்டு ராமலிங்கம் இறங்கினார். அவரும் அவனும் நடக்கத் தொடங்கினார்கள்.

எடுத்த எடுப்பிலேயே ராமலிங்கம் "விஷயத்தைச் சொல்லுங்கோ" என்றார்.

ரங்கராஜனால் வாயைத் திறக்கவே முடியவில்லை. என்ன சொல்வது? எங்கே ஆரம்பிப்பது? அவரிடத்தில் சொல்வதற்குத் தன்னிடம் விஷயமே இல்லை என்றுகூட அவனுக்குத் தோன்றியது. ஏதோ ஒரு வேகத்தில் அர்த்தமில்லாமல் அவரைப் பார்க்க வந்துவிட்டதாக நினைத்துச் சங்கடப்படவும் செய்தான்.

அப்படியேதான்!



'வருடா வருடம் நாங்கள் மாடல்களை மாற்றுவது கிடையாது' என்று பெருமைப்படுகிறார்கள் ஃபோக்ஸ் வேகன் கம்பெனிக் காரர்கள்.

- டெய்லி மிர்ரர்

- பாபு

"நீங்க விஜயாவுக்கு எழுதின கடிதாசைப் பார்த்தேன். அவளே கொண்டு வந்து காட்டினாள். அதைப் பத்தித் தான் பேச வந்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். சரிதானே?"

அவர் ஏதோ மனப்பாடம் செய்து ஒப்புவிக்கும் தோரணையில் உணர்ச்சியின் சாயலே இன்றித் தட்டுத் தடங்கல் இல்லாமல் பேசினார். அதிலிருந்து ரங்கராஜனுக்கு ஒரு தெளிவு உண்டாயிற்று. பேசுவதற்குரிய விஷயத்தை இவர் ஏற்கனவே தயார் செய்து காத்துக் கொண்டும் இருந்திருக்கிறார் என்று அவனுக்குத் தோன்றவே, அவனைவிட்டு ஒரு பெரும் சுமை இறங்கியது போலவும் இருந்தது. அவரே நேரடியாக விஷயத்துக்கு வந்து விட்டார்.

"இது உங்களுக்கு மட்டுமில்லே. எல்லோருக்குமே சிக்கலை உண்டுபண்ணக் கூடிய விஷயம். நாம்ப என்ன செய்யணும் என்கிறதைப்பத்தித்தான் யோசிக்கணும். இல்லையா?"

முகத்தில் சிந்தனையைத் தேக்கிக் கொண்டு, பொறுப்புணர்ச்சியுடனும், அதே சமயத்தில் பச்சாத்தாபத்துடனும் அவர் பேசியபோது, ஒரு குருவுக்கு முன்னால் சிஷ்யன் நிற்பது போலவே நின்றான் ரங்கராஜன்.

"உட்கார்ந்து பேசுவோம்."

ஒரு வேப்பமரத்தின் அடியில் கிடந்த சிமெண்ட் பெஞ்சில் இருவரும் உட்கார்ந்தார்கள். சுற்றிச் சூழ யாருமே இல்லை.

"ஸார்!" என்று ஆரம்பித்தார் ராமலிங்கம் பிள்ளை. அவன் முகத்தை நேருக்கு நேர் பார்த்துக் கொண்டு சொன்னார்: "வாழ்க்கையிலே சிக்கல் உண்டாகாமல் இராது. சிக்கலைச் சமாளிக்கத்தான் வேணும். சில சமயங்களிலே அப்படிச் சமாளிக்கிறதே பெரிய சிக்கலில் கொண்டு போய் விட்டுடறதும் உண்டு. எல்லாத்தையும் யோசிப்போம். எனக்குத் தெளிவு உண்டாகிறதுக்காக உங்களை இப்போ ஒரு

கேள்வி கேட்கிறேன். விஜயாவை நீங்க கல்யாணம் பண்ணிக்கப் போறதாச் சொன்னால், உங்க அப்பாவும் அம்மாவும் முழு மனசோடு சம்மதிப்பாங்களா?''

''இதைப் பத்தி அப்பாகிட்டே நான் பேசலை. ஆனால்... எங்க சித்தப்பா சொல்றதை....''

''சித்தப்பா சொல்றதை அப்புறம் கவனிப்போமே! அப்பா என்ன சொல்றார் என்கிறதைத்தானே முதலிலே கவனிக்கணும். இல்லையா?''

''அவருக்கு விருப்பமில்லை. சித்தப்பா சொல்றதை நம்பலாம். உயிரைக் குடுத்தாவது தடுத்திடணும்னு ரெண்டு பேரும் இருக்கிறதாக் கூட அவர் சொல்றார்.''

கொஞ்சம் கூட ஒளிவு மறைவு இல்லாமல் உண்மையை அப்பட்டமாக அவன் துணிந்து சொன்னான். விஷயத்தை மறைக்க மறைக்கத் தனக்குக் குழப்பம்தான் அதிகரிக்குமே ஒழிய, தெளிவு பிறக்கப் போவதேயில்லை என்று அவன் தீர்மானமாக முடிவு கட்டி விட்டான்.

அப்பாவும் சித்தப்பாவும் எதிர்க்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டபிறகு அவர் முகத் தோற்றத்திலோ, குரலிலோ மாறுதல் ஏற்படவில்லை. தீர்க்க தரிசனமாக அனைத்தையும் அறிந்து கொண்டவர் போலவே அவர் பேசினார்.

''அம்மா!... நான் கேட்கிறது அனாவசியக் கேள்விதான். அம்மா என்ன சொன்னால் என்ன? ரெண்டு பேரிலே யார் எதிர்த்தாலும் ஒண்ணுதான். அப்பாவுக்கு ஓர் அபிப்பிராயம், அம்மாவுக்கு வேறொரு அபிப்பிராயம்னு நாம் இங்கே பிரிச்சுப் பேசினால், அவங்க ரெண்டு பேரையும் தனித்தனியே பிரிச்சி அன்னியர்களாக்குகிற மாதிரி. இதுக்காகவா அவங்க கல்யாணம் பண்ணிக்கிட்டாங்க? ஒரு வீட்டிலே இவ்வளவு காலமும் அன்னியோன்யமாக வாழ்ந்தாங்க?....''

''நானும் அம்மாவைக் கேட்கலே.''

''அதுதான் சரி. அந்த அளவுக்குக் கூட நாம்ப கருணையில்லாமல் இருக்க முடியாது. அம்மாவைப் பத்தி விஜயா நிறையச் சொல்லியிருக்கிறாள். அவங்களைக் கஷ்டத்துக்கு உள்ளாக்கினால், அதை விஜயாவே பொறுக்க மாட்டாள்.... சரி, நான் கேட்க வேண்டியதைக் கேட்டுட்டேன். உங்க முடிவு என்ன?''

''.... இதிலே மத்தவங்க தடங்கல் பண்ணறதை நியாயம்னு ஒப்புக் கொள்ளலே. அந்த இடத்திலே ஸ்தம்பிச்சு நிக்கிறேன்.''

''ஸார்! இப்போ எது நியாயம், எது நியாயம் இல்லை என்கிறதைப் பத்தி நான் யோசிக்கலே. அது அனாவசியம். மனுஷனுடைய மனசைக் கையிலே வச்சிக்கிட்டுப் பேசுவோம். நமக்கும் மனுஷ உணர்ச்சி இருக்கு. இந்தக் கட்டத்திலே நியாய அநியாய விவகாரங்களைக் கொண்டு வர்றதே தப்புன்னு சொல்வேன். நான் சொல்றேன்: நீங்க நினைக்கிறது நியாயம்; விஜயா நினைக்கிறது நியாயம். நானும் என் மனைவியும் நினைக்கிறதும், உங்க அப்பாவும் அம்மாவும் சித்தப்பாவும் நினைக்கிறதும் நியாயம்தான். இதுதான் சிக்கல். உலகத்திலே இதுதான் சோக நாடகம். நியாயங்களே ஒண்ணோடொண்ணு மோதிக்கிறதை விட வேறே என்ன சோக நாடகம் இருக்க முடியும்?''

''நீங்க சொல்றதை என்னாலே முழுக்க ஒப்புக்கொள்ள முடியல்லே. எங்க அப்பாவும் சித்தப்பாவும் சொல்றது எந்த வகையிலே நியாயம்னு நான் ஒப்புக் கொள்றது?''

''இப்படி நீங்க கேட்பீங்கன்னு எனக்குத் தெரியும். விஜயாவும் நேற்று இப்படிக் கேட்டாள். கடைசியிலே தான் நான் சொன்னதை ஒப்புக் கொண்டாள்.''

ரங்கராஜனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. பிறகு, ''விஜயா ஒப்புக் கொண்டுட்டாளா? அப்படின்னா ஒரு சிக்கலும் இல்லையே!'' என்று, சூதாட்டத்தில் லட்சக் கணக்கான சொத்துக்களை இழந்து விட்டுச் சிரிப்பவனைப் போல் ரங்கராஜன் சிரித்தான்.

''நான் சொல்றதை நீங்க வேறு விதமாப் புரிஞ்சுக்கிட்டீங்கன்னு எனக்குத் தோணுது. விஷயம் இதுதான். 'காத்திருக்க வேண்டியிருக்கும்'னு நீங்க கடிதாசியிலே எழுதியிருந்தபடி, காத்திருக்கப் போறதாச் சொன்னாள். அதுதான் என் கட்சி. ஆனால்... நீங்க ரெண்டு பேரும் காத்திருக்கிறது, மத்தவங்க சிக்கலைத் தீர்த்துடப் போறதில்லை. அவங்க வேதனை வேதனைதான். அதுக்கு என்ன பரிகாரம் செய்ய முடியும் என்கிறதை நீங்க ரெண்டு பேரும்தான் முடிவு பண்ணணும். அந்தக் கட்டத்திலே நான் தலையிட மாட்டேன். என் முடிவைச் சொல்றேனே! உங்க காதலை நீங்க ரெண்டு பேருமே நிறைவேற்றிக்கிறதை — உடனடியா நீங்களே போய்க் கல்யாணம் பண்ணிக்கிறதை நான் தடுக்கவும் மாட்டேன்; ஆசிர்வதிக்கவும் மாட்டேன். நான்




பிரத்தியேகக் கலவை முறையினால் தயாரிக்கப்படும் எவர்:ப்ரெஷ் துணிகள் அணிவதற்கு மிகச் சிறந்தவை: எப்பொழுதும் இதமாகவும், குளுமையாகவும் இருப்பவை. நாள் முழுதும் காரியாலயத்திலும் வெளியே விளையாடும் போதும் அணிந்திருந்தாலும் தாக்கர்ஸேயின் எவர்:ப்ரெஷ் சூட்டிங்குகளும், ஷர்ட்டிங்குகளும் துளியும் கசங்காமல் புதுப்பொலிவுடன் விளங்கும்.

தாக்கர்ஸேயின் எவர்:ப்ரெஷ் துணிகளில் பெண்மணிகளுக்கேற்றவைகளுமுண்டு. மற்றும் கசங்காமல் இருக்க 'டெபிஸெஸ்டு' செய்யப்பட்ட 100% காட்டன் வகைகளில்தான் எத்தனை! ஸ்கிரீன் பிரிண்ட்கள், 2x2 பாப்ளின்கள், வர்ண / பிரிண்டட் கேம்பிரிக்குகள், வாயில்கள், டாபிக்கள் ஜாக்கர்டுகள் முதலியன!

Madison/TF/2CTM

தி இந்துஸ்தான் ஸ்பின்னிங் & வீவிங் மில்ஸ் கோ., லிட்.,
தி இந்தியன் மான்யுபாக்சரிங் கோ., லிட்.,
16, அப்பாலோ ஸ்ட்ரீட், பம்பாய்-1.
'எவர்:ப்ரெஷ்' துணிகளுக்கு ஏஜெண்டுகள்: மெஸர்ஸ் எல். ஹர்ஜீவன் & கோ.,
114, கிருஷ்ண சௌக், எம். ஜே. மார்க்கெட் பம்பாய்-2.

# விசேஷ அளிப்பு!

## ஸ்டாக் உள்ளவரை




ஒவ்வொரு டின்னிலும் உள்ள போர்ன்விடாவின் அளவு எப்போதும் போல் தான் (450 கிராம் நெட்)

**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்**
**காட்பரீஸ் போர்ன்விடா!**

புதிராப் பேசறதா நினைக்க வேண்டாம். காதலைத் தடுக்கிறது மகா பாவம்னு நான் நிச்சயமா நம்பறேன். ஆனால், உங்க காதல், உங்க அப்பாவையும், அம்மாவையும் ஜன்மம் முழுதுமாகத் துன்பப்படுத்துறதுக்கு நான் சம்மதிக்க மாட்டேன். விஜயா இந்த உலகத்திலே எந்த நல்ல ஆத்மாவையும் நியாயமாகக் கூடத் துன்பப்படுத்தக் கூடாது. இதை அவளும் ஒப்புக் கொண்டு விட்டாள். உங்க அம்மாவை நினைக்கிறப்போ, அவளாலே ஒப்புக் கொள்ளாமல் இருக்க முடியல்லே. கடைசியிலே 'காத்திருக்கிறேன்' என்ற முடிவைச் சொன்னாள். அது உங்க விருப்பம்; உங்க உரிமை. நான் தலையிட முடியாது. இதுக்காக நான் எதையும் தியாகம் செய்யக் கூடத் தயார். சீக்கிரமாவே அப்படி ஒரு சந்தர்ப்பம் வரப் போகுது. கொஞ்சம் கூட மனக் கஷ்டம் இல்லாமல் தியாகம் பண்ணுவேன்....''

ரங்கராஜன் அது என்ன விஷயம் என்று கேட்டான். அவர் உடனே சொல்லி விடவில்லை. அவனுக்கு அது தெரிந்தாக வேண்டும் என்ற அவசியம் இல்லை என்றும், கட்டாயம் சொல்லித் தான் ஆக வேண்டும் என்றால் சொல்வதாகவும் அவர் தெரிவித்தார்.

''எங்க ரெண்டு பேர் சம்பந்தப்பட்ட விஷயத்திலே தியாகம் பண்ணப் போகிறதாச் சொல்றீங்க. அதைப் பத்தி நான் கேட்கிறதிலே ஒரு தப்புமில்லையே?''

''வேறொன்றும் இல்லை. என் சிநேகிதர் ஒருத்தர் அவர் பையனுக்கு விஜயாவைக் கல்யாணம் பண்ணி வைக்கணும்னு பிரியப்படறார். என் பால்ய சிநேகிதர். இந்த ஊரிலேயே அவருக்கு நான் ஒருத்தன்தான் அந்தரங்க சிநேகிதம்னு தற்பெருமையாகக் கூட நான் சொல்லிக்க முடியும்... இதைப் பற்றி நான் விஜயாவுக்கு ஒரு வார்த்தை சொல்லவில்லை. அவளுடைய காதலுக்கு நான் மரியாதை கொடுக்கிறேன். உங்ககிட்ட ஏன் சொல்றேன்னு தெரியுமா? உங்க காதலுக்கு நான் எந்தத் தியாகமும் பண்றதுக்கு மீனாட்சியம்மன் சாட்சியா நான் தயாரா யிருக்கிறேன் என்கிறதை உறுதி பண்ணத்தான்.....''

இப்படிச் சொல்லி விட்டு ராமலிங்கம் பிள்ளை எழுந்து விட்டார். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. பேச்சை அரைகுறையில் நிறுத்தி விட்டு எழுந்து விட்டாரே என்று திகைத்து, அவனும் எழுந்து நின்று ''அப்புறம்?'' என்று கேட்டான்.

''அவ்வளவுதான் விஷயம். அப்புறம் ஓர் அங்குலம் நகர்வதற்குக்கூட எனக்கு உரிமை இல்லை. இந்த நிமிஷத்திலிருந்து எதையுமே முடிவு செய்ய வேண்டியது உங்க பொறுப்பு. விஜயா பொறுப்பு. உங்களுக்காக நானும் என் ஆயுசு முழுக்கக் காத்திருப்பேன். இது சத்தியம்'' என்று சொல்லி அவன் கையைப் பிடித்துக் கையடித்தும் கொடுத்தார்.

உள்ளத்தில் ஒரு தெளிவும் இல்லாமல், வந்தபோது இருந்ததை விட நூறு மடங்கு குழப்பத்துடன் சகல நாடி நரம்புகளும் செயலற்று, அவர் பின்னோடு நடந்து வந்து அவன் காரில் ஏறினான். அவர் கட்டளையிட்டபடி கார் மீனாட்சியம்மன் கோயிலுக்குப் போய்ச் சேர்ந்தது.

''வாருங்கள்!'' என்று அவர் அவனைக் கோவிலுக்குள் அழைத்துச் சென்றார். அம்பாளின் முன்னால் கூப்பிய கரமும் குனிந்த சிரமுமாக அரை மணி நேரத்துக்கு மேலேயே நின்று அவர் மௌனப் பிரார்த்தனை செய்தார். பிறகு இருவரும் வெளியே வந்து மீண்டும் காரில் ஏறிக் கொண்டனர். வீட்டு வாசலில் காரிலிருந்து இறங்கியதும் அவன் தன் வீட்டுக்கு உடனே புறப்பட ஆயத்தமானான்.

''உங்களை இப்போ உள்ளே வரச் சொல்லிக் கஷ்டப்படுத்த எனக்கு இஷ்டமில்லை. போயிட்டு வாருங்கள். உங்களுக்கு ஓர் ஆறுதலும் சொல்ல முடியாத ஒரு கட்டத்தில் நிற்கிறேனே என்கிறதுதான் என் வருத்தம். (இதன் பின் ஆங்கிலத்தில் பேசினார்) ஸார், நானும் காதலனாக இருந்திருக்கிறேன். இப்போ தகப்பனாகவும் இருக்கிறேன். இந்த ரெண்டு நிலையிலும் எனக்குக் கடமைகள் உண்டு. இன்னொரு காதலையும் நான் மதிக்கணும். இன்னொருவருடைய தந்தைமையும் நான் மதிக்கணும். உங்களுக்கு மீனாட்சியம்மன்தான் ஆறுதல் அளிக்க முடியும். அதுக்காகத்தான் அவளைக் கும்பிட்டுட்டே வீட்டுக்கு வந்தேன். போயிட்டு வாருங்கோ.''

ரங்கராஜன் வணங்கி விடை பெற்றுக் கொண்டு வீடு திரும்பினான்.

வீட்டுக்குள்ளே போய் அடியெடுத்து வைத்ததும், தாயாரைத்தான் தேடிப் போனான். அவனைப் பார்த்ததும் கைகளால் இரண்டு கண்களையும் மூடிக் கொண்டு விம்மி விம்மி அழுதாள்.

''ராஜா!'' என்று குரல் கொடுத்துக் கொண்டே ஓடி வந்து அவன் கைகளைப் பற்றினாள் ஜானகியம்மாள்.

''எதுக்காக ராஜா அழுறே?''

இந்தக் கேள்வியைப் பல தடவைகள் கேட்ட பிறகுதான் அவனால் பதில் சொல்ல முடிந்தது.

''அம்மா! நான் ஏன் அழறேன்னு உனக்கு நிஜமாத் தெரியாதாம்மா?''

ஜானகி அம்மாள் கண்ணீர் விட்டுக் கொண்டே ''எனக்கு எல்லாம் தெரியும் ராஜா. எல்லாமே தெரியும். நான் யாரை நினைச்சு அழறதுன்னு தெரியாமல் தவிக்கிறேண்டா...'' என்றாள்.

## அத்தியாயம் 2

அடுத்த வாரம் அருணாசல முதலியார் மதுரைக்கு வந்தார். தாம் மட்டும் தனியாக வராமல் மனைவி கோமதியம்மாளையும், மகள் தங்கத்தையும் அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தார். மூவரும் உள்ளே நுழைந்ததிலிருந்து வீட்டின் சூழ்நிலை என்றும் காணாத விதத்தில் மாறி ரங்கராஜனுக்கு ஒரு நரகம் போலவே தோன்றியது. அருணாசல முதலியார் மாடியில் கூச்சல் போடுவது கீழே கேட்டது. கீழே கோமதியம்மாளும் தங்கமும் கண்ணீரை மாலை மாலையாக வடித்துக் கொண்டு ஜானகியம்மாளை இரண்டு புறத்திலும் கட்டிப் பிடித்துக்கொண்டு அழுதார்கள்.

சித்தப்பா குடும்பத்தை 'கெட்-அவுட்' என்று சொல்லிக் கதவை இழுத்துச் சாத்திவிடலாமா என்று கூட ரங்கராஜனுக்கு ஒரு சமயம் ஆத்திரம் வந்தது.

''மானம் போய் விட்டதே! மரியாதை போய் விட்டதே. இனிமேல் தலைதூக்கி நடக்க முடியாமல் பண்ணி விட்டானே!'' — அருணாசல முதலியார் இப்படிச் சொல்லியே கூச்சல் போட்டார். அவருடைய மனைவியும் மகளும் இவ்வாறு சொல்லியே அழுதார்கள்.

ரங்கராஜன் சன்னாசிப்புதூருக்குப் போயிருந்தபோது விதவை நிர்மலாவுக்கு நூறு ரூபாய் கொடுத்து, அவளுக்கு வீடு தருவதாக உறுதி மொழியும் கொடுத்த செய்தி அன்றிரவு விடிவதற்குள் காட்டுத் தீயைப் போல் கிராமம் முழுதும் பரவி விட்டது. நெருப்பைப் பற்ற வைத்தவன் மாடசாமிதான் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஊரெல்லாம் சேர்ந்து விலக்கி வைத்திருக்கும் ஒரு நடத்தை கெட்டவளுக்கு அவன் தேடிப் போய் உதவி செய்ததை அறிந்து, அவன் தாம் கெட்ட காரியத்தை, ஒரு நல்ல மனிதன் செய்யக் கூசும் காரியத்தைச் செய்து விட்டதாகக் கிராமமே கேவலமாகப் பேசுவதாக மாடசாமி சாத்தூருக்கு வந்து அருணாசல முதலியாரிடம் சொல்லியிருக்கிறான்.

''அவனும் ஒரு மனுஷனா? மனுஷன் பெற்ற பிள்ளைதானா? கெடுகெட்டவளைத் தேடிப் போய் ரூபாயைத் தூக்கிக் கொடுத்திருக்கிறானே! இந்த ஊரை அவன் மதித்தானா? அவனையும் அவளை இந்த லட்சணத்தில் வளர்த்து விட்டிருக்கிறவர்களையும் இனிமேல் ஊருக்குள் வர விடலாமா?'' என்றெல்லாம் கிராமத்தில் மக்கள் அல்லும் பகலும் பேசிக் கொள்கிறார்கள் என்றும், கால் காசுக்கு லாயக்கில்லாத வெறும் பயல்கள் கூடக் காரித் துப்புகிறார்கள் என்றும் மாடசாமி வந்து சொன்னானாம். அவனுக்கு விருந்துபசாரம் செய்த முதலியாரையும் ஊரில் எல்லோரும் கேவலமாகப் பேசுவதாகவும், அதனால் அவர் வெளியே தலைகாட்டப் பயந்து முக்காடு போட்டுக் கொண்டு வீட்டுக்குள்ளேயே கிடப்பதாகவும் சொன்ன அருணாசல முதலியார், 'அத்தோடு போச்சா?' என்று சொல்லி, ஆங்காரத்துடன் மேற்கொண்டும் பேசத் தொடங்கினார்:

''கதை எப்படியெல்லாம் குட்டி போட்டிருக்கிறது தெரியுமா? அவனவன் இன்னதுதான்னு இல்லாமே நினைச்சபடியெல்லாம் கதை கட்டிக்கிட்டிருக்கிறானாம். இவனுக்கும் அவளுக்கும் என்னமோ தொடர்பு இருக்கிற மாதிரியும், அதனாலேதான் ரூபாயைக் கொடுத்திருக்கிறான் என்கிற மாதிரியும் பேசுறான்களாம்... இதைக் கேட்டுக்கிட்டு நாம்ப உசிரோட இருக்கணுமா?''

நடராஜ முதலியாரால் அவமானத்தைத் தாங்கவே முடியாமல் கண்களை இறுக மூடிக் கொண்டார்.

ரங்கராஜனோ கோபத்தை வெளியிட வார்த்தைகள் அகப்படாமல், அவர் சொல்லுவதை முழுக்கக் கேட்போம் என்று உட்கார்ந்திருந்தான்.

''சீ!'' என்று அருணாசல முதலியார் அருவருப்போடு சொல்லி விட்டு அவனை ஒரு தடவை ஏறிட்டுப் பார்த்தார். ''நீ படிச்சது இதுக்குத்தானான்னு கேட்கிறேன். உன்னாலே அந்த மாடசாமிப் பயலும் தலையிலே அடிச்சுக்கிட்டு அழுறான் தெரியுமா? அவன் அவளுக்கு உள்ளான், அதனாலேதான் உன்னை அவன்கிட்டே கூட்டிக்கிட்டுப் போய் ரூபாயை வாங்கிக் கொடுத்திருக்கிறா

maa.TTP.6757.TAM




# சிறந்த குடும்பக்கலையின் தொடக்கம் ப்ரெஸ்டீஜ்

**Prestige**

முற்றிலும் அபாயமற்றது: அதிகப்பட்ச பாதுகாப்பு சாதனங்கள் உள்ளன.

தாராளமான இடவசதி: உங்கள் பாத்திரங்களுக்கோ, ஸ்டீம்-இட்டிலிக்கோ.

சர்வீஸ்: இந்தியா முழுவதும், விற்பனைக்குப்பின் சர்வீஸ்.

## எந்தக் குடும்பத்திற்கும் ஏற்றதொரு சரியான சைஸ் இருக்கிறது.

நேரத்தை - மிச்சப்படுத்துகிறது
எரிபொருளை - மிச்சப்படுத்துகிறது




**இலவசம்:** உங்கள் வசதிக்கென, அதிகப்படி ப்ளக் ஒன்றும், பிண்டில் ஒன்றும், சமையற்கலைப் புத்தகம் ஒன்றும் இந்த அட்டைப் பெட்டிக்குள் பேக் செய்யப்பட்டுள்ளன.

தயாரிப்பாளர்கள்:
டிடி. (ப்ரைவேட்) லிமிடெட்
பெங்களூர்-16.

---

தென்பிராந்திய விநியோகஸ்தர்கள்:

M/s. முகமத் இப்ராஹிம் & கோ., பிரைவேட் லிமிடெட்
7/8, மவுண்ட் ரோடு, சென்னை - 2

# புதியது!

## தலைவலியைப் போக்க உபரி வலிமையுள்ள வலிநிவாரணி

# பவரின்



**பவரின்** டாப்யூல் **வலியை முறியடிக்கிறது.**

தலைவலி, தசை வலி, பல் வலி,
ஜலதோஷம், ஃப்ளூ முதலியவற்றால்
ஏற்படும் அவதிகளைச் சக்தியுடன்
அபாயமற்ற முறையில் எதிர்க்கிறது.

*விழுங்க எளிதான ஓர் காப்ஸ்யூல் வடிவ வில்லை.
ரிஜிஸ்டர்டு யூஸர்ஸ்: ஜெஃப்ரி மானேர்ஸ்
& கம்பெனி லிட்.

EXTRA-STRENGTH
POWERIN
ANALGESIC Tabules

PW-5-152 TM

என்கிற மாதிரியும் பேசுறாங்களாம். ரெண்டொருத்தன் அவனை அடிக்கவே வந்துட்டானும். 'நான் ஒரு பாவமும் அறியேன். என்னை இந்தக் கதிக்கு ஆளாக்கிட்டுப் போயிட்டாரே. என் பொருஞ்சாதி கூட என்னைக் காறித் துப்புறாப்பலே பண்ணிப்பிட்டாரே'ன்னு அந்த மாடசாமி அழுத அழுகை உனக்குத் தெரியுமா?''

''சித்தப்பா! அதுக்கு இப்போ நான் என்ன செய்யணும்னு சொல்றீங்க? ஏன் கதையை ஒரேயடியா இழுத்துக்கிட்டுப் போகணும்?'' என்று கோபத்தோடு கேட்டான் ரங்கராஜன்.

''கதையை நானு இழுக்கிறேன்? என்ன பேசுறே நீ? எனக்கு அதுதான் வேலையா? நீ அவனுக்கு வீடு குடுக்கப் போறதா வேறே சொன்னியாமே? எந்த வீட்டைக் குடுக்கப் போறே? இதுக்குத்தான் ஊரிலே வீட்டை விக்கப் படாதுன்னு சொன்னியோ? நீ குடுத்துருவையா? தெரியாமத்தான் கேட்கிறேன். வீட்டைக் குடுத்து...அப்புறம்? சொல்லேன்... அப்புறம்?.... அதையும் சொல்லேன்... அவனுக்கு... நகை நட்டுப் பண்ணிப் போட்டுப் பார்க்கப் போறயான்னு கேட்கிறேன்?''

அவருடைய கூச்சலை மீறி, ''சித்தப்பா! நிறுத்துங்க. போதும். என்னமோ குபேரப் பட்டணம் கொள்ளை போயிட்டாப்பலே கூப்பாடு போடுறீங்களே! அவன் சொன்னானும்; இவன் சொன்னானும். என் விருப்பம்: நான் குடுப்பேன். சொல்லப் போனா அவனைக் கல்யாணம் பண்ணிக்கவும் எனக்குத் தைரியம் உண்டு. தெரியுமா?'' என்று சொல்லி வெறிப் பார்வையோடு அவரைப் பார்த்தான்.

நடராஜ முதலியார் எழுந்து கீழே போய் விட்டார்.

''ஏய்! நீ சுயபுத்தியோடதான் பேசுறயான்னு கேட்கிறேன். நீ படிச்சவனா? நீ ஒரு மனுஷன்தானா? உன்கிட்டே இனி ஒரு மனுஷன் பேசுவானா?'' என்று சினந்து நெருப்பைக் கக்கிவிட்டு, ''சீச்சீ, வெளியே தெரிஞ்சால் வெட்கக் கேடு'' என்று சொல்லிக்கொண்டு அருணாசல முதலியாரும் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு கீழே இறங்கி விட்டார். இறங்கி வந்த வேகத்திலேயே மனைவியையும் மகனையும் அழைத்து, ''புறப்படுங்கோ. நமக்கு இனிமேல் இங்கே வேலையில்லே; மரியாதையும் இல்லே. புறப்படுங்கோ'' என்றார்.

எல்லோரும் திகைத்து நின்றார்கள். ''என்ன?'' என்று பயந்து நடுங்கிக் கொண்டே கேட்டாள் கோமதியம்மாள்.

''புறப்படுன்னா புறப்படணும். மறு பேச்சுப் பேசக் கூடாது. தெரிஞ்சுதா?'' என்று கண்களை உருட்டி விழித்து மனைவியை எச்சரித்தார் முதலியார். உடனே ''தங்கம்!'' என்று பலமாகக் கத்தி அவளை அழைத்தார்.

அடுத்த நிமிஷமே அவர் வாசற்படியில் இறங்கி விட்டார். சிறிது நேரத்தில் மனைவியும் மகளும் தலை குனிந்து கொண்டு அவரைப் பின் தொடருவதைத் தவிர வேறு வழியில்லாமல் போய் விட்டது.

ஜானகியம்மாள் பயந்து போய், ''ராஜா?'' என்றாள்.

அப்போது நடராஜ முதலியாரும் தம்பியைப் பின்தொடர்ந்து விட்டார்.

''அம்மா! வெந்நீரிலே விடு வெந்து போச்சுன்னு பேசுறார் சித்தப்பா. அப்படி விடு வெந்தே போகட்டும்!.... அம்மா! அவங்க கோவிச்சுக்கிட்டுப் போனதைப் பத்தி நான் கவலைப் படவே யில்லே. சொல்லப் போனால், சந்தோஷம்தான். முட்டையா இருக்கிற வரையிலேதான் கோழி அடை காக்கணும். குஞ்சு வெளியே வந்தப்புறமும் அடை காத்தால் குஞ்சு சூடும் பாரமும் தாங்காமல் செத்துப்போயிடும். நான் சாகத் தயாரா யில்லே....''

''நீ என்னடா சொல்லுறே?''

''அம்மா, நீ ஒண்ணும் கவலைப் படாதே. ஏன் கண்ணீர் விடுறே?... எனக்கு மனசு இப்போ சரியா இல்லே. சாவகாசமா வந்து உன்கிட்டப் பேசுறேன்'' என்று சொல்லி விட்டு அவனும் வெளியே போய்விட்டான். (தொடரும்)





# எதிர்பாராத மகிழ்ச்சி

## அணிவகுப்பில் ஆனந்தம்

அப்பொழுது நாங்கள் புதுதில்லியில் இருந்தோம். நான் ஏழாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தேன். ஒரு நாள் காலை எங்கள் ஆசிரியர் எல்லாப் பள்ளி மாணவர்களும் சேர்ந்த அணிவகுப்பு அன்று நடக்க விருப்பதாகச் சொன்னார். உடனே பயிற்சி தொடங்க இருபது மாணவ—மாணவிகளுடன் என்னையும் அழைத்தார். நான்கு மணி நேரம் ஒத்திகை நடத்தினோம். அன்று அணிவகுப்புக்குப் பிரதமர் நேரு அவர்கள் தலைமை வகிப்பதாக இருந்தது.

ஆனால் அணிவகுப்பு நடைபெறவிருந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்ததும் நாங்கள் பெரிய ஏமாற்றத்துக்கு உள்ளானோம். அணிவகுப்புக்கு வருவதாக முந்தைய தினமே கூறியிருந்த பள்ளிகளுக்குத்தான் பங்கு கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாக நிர்வாகிகள் கூறி விட்டனர். இதைக் கேட்டதும் பிற்பகலில் பட்ட கஷ்டமெல்லாம் வீண் என்பதோடு நேருஜியின் முன் நடக்கும் அணிவகுப்பில் கலந்து கொள்ள நமக்கு அதிர்ஷ்டம் இல்லையே என்ற ஏக்கம் பிடித்தது. ''வந்ததுதான் வந்தோம். நல்ல இடமாகப் பார்த்து உட்காரலாம். போகும் போது சௌகரியமாகப் போய் விடலாம்'' என்ற கருத்தில் நுழை வாசலின் அருகில் 'காலரி'யில் 'சிவனே' என்று அமர்ந்து கொண்டோம்.



நிகழ்ச்சிகள் ஆரம்பமாவதற்குச் சில நிமிடங்களே இருந்தன. திடீரென்று கூட்டத்தில் எல்லோரும், ''நேருஜி, நேருஜி'' என்று கூறி எழுந்திருக்க ஆரம்பித்து விட்டனர். அவ்வளவுதான்! அதுவரையில் 'உம்' என்று உட்கார்ந்திருந்த நாங்கள் துள்ளி எழுந்து நுழை வாசலை நோக்கினோம். நேருஜி வருவது எங்கள் கண்ணில் பட்டு விட்டது. சிறிது நேரத்தில் அவர் நாங்கள் இருக்கும் இடத்துக்கு வெகு சமீபத்தில் வந்துவிட்டார். எங்கள் உற்சாகம் கரைபுரண்டு ஓடத் தொடங்கியது. ''சாசா நேரு ஜிந்தாபாத்'' என்ற கோஷம் எங்களிடமிருந்து கிளம்பியது. நாங்கள் எதிர்பார்த்தது போல் நேருஜி எங்கள் பக்கம் பார்த்துப் புன்னகை செய்து கொண்டே கை அசைத்தார். இதுதான் சமயம் என்று சடாரென்று முன்னால் சாய்ந்து சிரித்துக் கொண்டே அவர் முன் கை நீட்டினேன். சற்றும் எதிர்பாராத வகையில் புன்முறுவலுடன் கை குலுக்கிவிட்டு நகர்ந்தார். மற்றவர்களும் உடனே என்னைப் பின்பற்றினர். அவரும் நின்ற எல்லோருடனும் கைகுலுக்கி விட்டு நகர்ந்தார். அன்று நாங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை எனக் கூறலாம்.

நல்ல வேளை! எங்களை அணிவகுப்பில் கலந்து கொள்ள அனுமதிக்கவில்லை! சேர்ந்துக் கொண்டிருந்தால் பிரதமரை — ஆசிய ஜோதியை — நன்றாகப் பார்த்திருக்கக்கூட முடியாது! ஆனால் எங்களை ஒதுக்கியதால் முதலில் வருத்தமடைந்தாலும் பிறகு பாரத ரத்தினத்துடன் கைகுலுக்கும் பேரதிர்ஷ்டமல்லவா கிட்டியது!

**கமலா, சென்னை**

## அவர் பெருந்தன்மை

நான் ஒருவரிடமிருந்து ஐயாயிரம் ரூபாய் கடன் வாங்கியிருந்தேன். மூன்று வருஷங்களாகியும் என்னால் அப்பணத்தைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை. அவரை ஒரு நச்சுத்திரையாள் என்றே சொல்ல வேண்டும். பணம் வேண்டும், பணம் வேண்டும் என்று ரொம்ப நச்சரித்துக் கொண்டிருந்தார். இவரிடம் போய் மாட்டிக் கொண்டோமே என்று நினைத்தேன். கோர்ட்டில் வழக்குப் போடப் போவதாகப் பயமுறுத்திக் கொண்டிருந்தார். தான் கொடுத்த பணத்தில் சல்லிக் காசுகூடத் திரும்பி வராது என்று அவருக்குப் பயம் போலும். நாலாம் வருஷம் நான் வேலையிலிருந்த கம்பெனியிலிருந்து ரிடையரானேன். பிராவிடண்ட் பணம் வந்தவுடன் முதல் காரியமாக அவர் கடனைத் தீர்த்து விடுவது என்று முடிவு பண்ணினேன். நாலு வருஷங்களுக்கு வட்டி இரண்டாயிரத்து நானூறு ஆயிற்று. ஆகவே, வட்டியும் முதலுமாக ஏழாயிரத்து நானூறு ரூபாய்களையும் எடுத்துக் கொண்டு அவருடைய வீட்டுக்குப் போனேன். ஐயாயிரம் ரூபாய்தான் பெற்றுக் கொண்டார் அவர்.



''இட்டு! உன் கஷ்டம் எனக்குத் தெரியும்! வட்டி வேண்டாம்'' என்று வட்டியை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டார். பணம் பணம் என்று பறந்த அவர் இவ்வாறு பெருந்தன்மையுடன் நடந்து கொள்ளுவார் என்று நான் கனவில்கூட எதிர்பார்க்கவில்லை.

**வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி**

# சாதாரண ஜலதோஷம் சிலரை உடனே பற்றிக் கொள்ளுகிறது. மற்றவர்களைப் பற்றுவதில்லை. ஏன் ?



சாதாரண ஜலதோஷத்தால் எளிதில் பாதிக்கப்படுதல் மற்றும் இதர உடற்பிணிகள், அதாவது பசியின்மை, சோர்வு, சருமம் மற்றும் பற் கோளாறுகள் இவற்றிற்கு காரணம், விடமின்கள் மற்றும் தாதுச் சத்துக்களின் பற்றாக்குறையாக இருக்கக்கூடும். எனவே, பெரிய அளவு விடமின்களும் தாதுச் சத்துக்களும் உங்கள் உடலுக்கு ஒழுங்காகக் கிடைப்பதற்காக நீங்கள் நாள் தோறும் ஒரு விம்க்ரான் சாப்பிடுங்கள். விம்க்ரானில் 11 அத்தியாவசிய விடமின்களும், 8 முக்கியமான மினரல்களும் அடங்கியுள்ளன. அதனால் உங்களுக்கு ஆரோக்கியம், வலிமை, ஆற்றல், மற்றும் நோய்களை எதிர்க்கும் சக்தி கிடைக்கும்.

## விம்க்ரான்®

மல்டிபிள் விடமின்-மினரல் டேப்லெட்டுகள்






நாள் முழுவதும் உங்களை சக்தியுடன் வைத்திருக்க ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை போதுமானது.

SQUIBB® SARABHAI CHEMICALS

® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பரேட்டட், ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்கைக் குறிக்கிறது. ஸாராபாய் ப்ரேம் சந்த் பிரைவேட் லிட்., இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

Shilpi SC 44/83 Tam



## ஆரம்பம் என்ன?

பிறந்த தினத்தன்றே இரண்டு வயது முடிந்ததாகச் சொல்லப்படுவது எது தெரியுமா? ரேஸ் குதிரைதான்!

நகல்: ரமணன். ஆதாரம்: "சில்ட்ரென்'ஸ் டைஜெஸ்ட்"

---

பார்க்கும் விதத்தில்தான் ஒரு பொருளின் அழகு மாறுபடுகிறது என்பது எத்தனை உண்மை! கால்கள் ஊனமடைந்ததால் படுக்கையிலேயே நாட்களைக் கடத்தும் எட்டு வயதுச் சிறுவன் கூறினான்: "மாமி, தினமும் காலையில் ஒரு காக்கை என் படுக்கையறை ஜன்னலில் வந்து உட்கார்ந்து, எனக்கு 'குட்மார்னிங்' சொல்லுகிறது. நீங்கள் அதைப் பார்த்து இருக்கிறீர்களா?"



சாதாரணமாக யாவருக்கும் காக்கை வந்து கத்தினால் அதன் குரல் தொல்லையாக இருக்கும். அதுவே அந்தச் சிறுவனுக்கு வாழ்த்துக் கூறும் குரலாக மனத்துக்குப் படுகிறது!

"பெமினா" - சரோஜா நரசிம்மன்

---

## குடை ராட்டினம்!

இப்பொழுது பம்பாய் கார்ப்பரேஷனில் உதவி கமிஷனராக இருக்கும் திரு எஸ். எம். ஒய். சாஸ்திரி ஒரு நகைச்சுவை எழுத்தாளர். நிர்வாக இடைஞ்சல்களைப் பற்றி 'இந்த நிர்வாகத் தொழில்' (This Business of Administration) என்ற தலைப்பில் ஒரு சிறிய புத்தகம் ஒன்றை வெளியிட்டிருக்கிறார். அதிலிருந்து ஒரு பகுதி (சுருக்கப்பட்டது.)



"காலனியில் குடியிருக்கிறீர்கள். உங்கள் வீட்டை யாரும் கவனிப்பது கிடையாது. பத்து ஆண்டுகளாக வெள்ளை கூட அடிக்கவில்லை. சுவரில் விரிசல், பிளாஸ்டர் பெயர்ந்து விழுந்து கொண்டே இருக்கிறது. குழாயில் தண்ணீர் இல்லை. சாக்கடை அடைத்துக் கொண்டு ஓடவில்லை. தண்ணீர் தேங்குகிறது. கொசு பெருகுகிறது. உங்களுக்குக் கோபம் வராமல் என்ன செய்யும்? பெரிய பெட்டிஷன் ஒன்றை எழுதி எடுத்துக் கொண்டு முனிசிபல் ஆபீஸ் போகிறீர்கள். தபாலில் போட நம்பிக்கை இல்லை. முனிசிபல் ஆபீஸில் ஏகக் கூட்டம். காகிதத்தை எங்கே கொடுப்பது? 'சுகாதார இலாகா' என்ற பலகை தென்படுகிறது. 'வீடு மோசமாக இருப்பதால் நமது உடல் நலம் கெட்டு விட்டதே. இதற்கு இவர்கள்தானே காரணம். ஆகவே ஹெல்த் ஆபீஸில் கொடுப்போம்' என்று உள்ளே போகிறீர்கள். கிளார்க்கிடம் கொடுக்கிறீர்கள். வாங்கிப் பார்க்கிறார். முகத்தில் கோப ரேகை படிகிறது.

"உத்தரம் தொங்குகிறதா?"

"ஆமாம்."

"அப்படியானால் இதை என்ஜினியரிங் இலாகாவில் கொடுங்கள்."

என்ஜினியரிங் இலாகாவுக்குப் போகலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கும்போதே மேலே படித்து அவர் கேட்கிறார்:

"தண்ணீர் சாக்கடையில் ஓடவில்லையா?"

"ரொம்ப நாட்களாக."

"அப்படியானால் இது ட்ரெயினேஜ் இலாகா சமாசாரம்."

"சரி."

"குழாயில் தண்ணீர் வேறு வரவில்லை என்கிறீர்களே."

"உண்மைதான்."

"இது வாட்டர் ஒர்க்ஸ் டிபார்ட்மெண்ட் கவனிக்க வேண்டும்."

"சரி."

"என்ன 'சரி' ஒரு டஜன் இலாகாக்கள் கவனிக்க வேண்டிய விஷயங்களை ஒரே தாளில் எழுதிக்கொண்டு வந்தால் எப்படி?"

"என்ன செய்ய வேண்டும்?"

"சில புகார் வேறு எழுதியிருக்கிறீர்கள், வீட்டுக்காரரைப் பற்றி. இது யார் கவனிப்பது என்றே தெரியவில்லை."

பெட்டிஷனோடு வெளியே வருகிறீர்கள். "வேலை நடக்கவில்லையே!" இது உங்கள் குறை.

"வேலை செய்ய விட மாட்டேன் என்கிறார்களே!" இது அந்தக் கிளார்க்கின் குறை. - "நாதன்"

---



## இழப்பு!

பெருமைக்காரன் கடவுளை இழக்கிறான்; பொறாமைக்காரன் நண்பனை இழக்கிறான்; கோபக்காரன் தன்னையே இழக்கிறான்.

பிலிப் ஹெரால்ட் - அனுப்பியவர்: வி. சு. வாசுதேவன்

**ப**த்தடிக்கு எட்டடி இருக்குமா இந்த அறை?... இருக்கும்... அறையினுள் ஒரு சாமான் செட்டு இல்லை. அதுவும் நான் ஒருத்தி மாத்திரமே இங்கே இருப்பதால் இந்த அறை பெரிதாகத் தோன்றுகிறது. இந்த பம்பாய்ப் பட்டினத்தின் சராசரி மனிதனுக்குக் கிடைக்கும் இடத்தைக் கணக்கில் வைத்துக் கொண்டு பார்த்தால் இது பெரிய இடம் என்றுதான் சொல்ல வேண்டும்.



# தேவி

பத்தடிக்கு எட்டடி அறை. அறையின் ஒரு மூலையில் சுருட்டி வைக்கப்பட்டிருக்கும் கிழிந்துபோன பாய் ஒன்று. மற்றொரு மூலையில் ஓர் அலுமினியத் தட்டு. எத்தனை பேர் சாப்பிட்டுச் சாப்பிட்டுக் கைமாறிய தட்டோ! நசுங்கி நலிந்து கறுப்பாகக் கிடக்கிறது. அதன் பக்கத்தில் ஒரு சின்னச் செம்பு. இவ்வளவுதான் என் உடைமைகள்... இவற்றைப் பார்க்கப் பார்க்க மனதின் அடி ஆழத்தில் இத்தனை சோகத்தையும் தாண்டிச் சிரிப்புத் தான் எழுகிறது. இருவாபுரத்தில் யாரிடமாவது போய் உங்கள் ஊர் கிருஷ்ண வாத்தியாரின் சின்னப் பெண் பம்பாய்ச் சிறையில் கைதியாக இருக்கிறாள் என்றால் யார் நம்புவார்கள்? சொல்பவர்களைத்தான் பைத்தியம் என்பார்கள்!

இங்கே வந்த இரண்டு மூன்று நாட்களுக்குக் கொஞ்சம் மன உளைச்சலாகத்தான் இருந்தது. ஆனால் சீக்கிரமே உறுதிப்பட்டுப் போய்விட்டது. இங்கே என்னைக் கண்காணிக்க என்று இருக்கும் பெண் வார்டர்கள் என்மீது அன்பாக இருக்கிறார்கள். ஒரு கைதி எதிர்பார்க்க முடியாத சௌகரியங்கள் எல்லாம் எனக்குக் கிடைக்கின்றன. மாலை நேரம் ஆனால் இளைப்புக்கும் கடற் கரைக்கும் அலைய விழையும் இன்றைய சமூகத்தைப் பிரதிபலிக்கும் பெண் அல்ல நான். ஆகவே இந்த இடத்தில் நான் அப்படி ஒன்றும் கஷ்டத்தை அனுபவிப்பதாகத் தோன்றவில்லை.... அப்பாவை நினைத்துக் கொண்டால்தான் மனம் கொஞ்சம் தளர்ச்சி அடைகிறது. ஆனால் நான் இப்படி இங்கே வந்ததனால் அப்பாவுக்கும் ஓரளவு நிம்மதியான வாழ்க்கை கிடைத்து விட்டது என்றே சொல்ல வேண்டும்.

எனக்கு ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை என்று தீர்ப்பளித்த மாஜிஸ்திரேட் உண்மையிலேயே மனம் கலங்கித்தான் போனார் என்பதை அவர் கண்களே காட்டிக் கொடுத்து விட்டன. அவருக்கு அவருடைய பெண்ணின் நினைவு வந்ததோ என்னவோ. என்னைப் போல் குற்றம் செய்து விட்டுக் கைதிக் கூண்டில் நிற்கா விட்டாலும் அவளுக்கும் கிட்டத்தட்ட என் வயது இருக்கலாம் என்று நினைக்கிறேன். விசாரணை ஆரம்பமான அன்றே மாஜிஸ்திரேட்டை முதல் கேள்வியாக அதைத்தானே கேட்டேன்?

"தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்த குற்றத்துக்காக உன்மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. இதைப் பற்றி நீ ஏதாவது சொல்ல விரும்புகிறாயா? குற்றத்தை நீ ஒப்புக் கொள்கிறாயா?" என்று முதல் முதலாக அந்த மாஜிஸ்திரேட் விசாரணையை ஆரம்பித்தார். அவரை நன்றாகப் பார்த்தேன். அவர் குரலில் தனியான ஒரு கனிவை உணர்ந்தேன். 'உன்மீது எனக்கு வருத்தமாக இருக்கிறது அம்மா' என்று சொல்வதுபோல் இருந்தது அவர் குரல்.

"வழக்கை விசாரிப்பதற்கு முன்னதாக நான் தங்களிடம் சில விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாமா?" என்று அவரைக்கேட்டேன்.

"என்ன வேண்டுமானாலும் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். உனக்குப்பூரணமான தற்காப்புக்கு வழி செய்து கொள்ளச் சட்டத்தில் இடம் இருக்கிறது. வழக்குக்குப் புறம்பானதாக இல்லாமல் இருந்தால் என்ன வேண்டுமானாலும் கேட்கலாம்" என்றார்.

"மிக்க நன்றி. வழக்குக்கு நெருங்கிய சம்பந்தம் உடைய ஒன்றைத்

அட்டைப்படக் கதை



# வ. சா. நாகராஜன்






நான் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். அதோ அங்கே நின்று கொண்டிருக்கும் அம்மாவின் கழுத்தில் இருக்கும் தங்கச் சங்கிலியை இதோ நிற்கும் இவர் பலவந்தமாக இழுத்துப் பறித்துக் கொண்டு ஓடினால் இவருக்கு என்ன தண்டனை கிடைக்கும்?'' என்று அமைதியாகக் கேட்டேன்.

என் கேள்வி மாஜிஸ்திரேட்டுக்கு மிக்க விசித்திரமாகப் பட்டிருக்கும். ''இது எதற்கம்மா? இருந்தாலும் சொல்கிறேன். ஒருவருடைய கழுத்துச் சங்கிலியைப் பலவந்தமாகப் பிடித்து இழுத்து அறுத்துக் கொண்டு ஓடினால் அப்படி ஓடும் ஒரு மனிதருக்குச் சட்டப்படி மூன்று முதல் ஏழு ஆண்டுகள் வரை தண்டனை கிடைக்கும்...''

''சரி. அந்தப் பெரியவர் அப்படிச் செய்யாமல் அதோ நிற்கும் அந்தப் பெண் அந்தக் குற்றத்தைச் செய்தால்...?''

மாஜிஸ்திரேட்டுக்கு என் கேள்வி சற்று எரிச்சல் மூட்டியது போல் தெரிந்தது. ''திருடுவது ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, சட்டத்துக்குப் பார்வை ஒன்றுதான். சட்டத்தின் முன் ஆண்,—பெண், ஏழை, பணக்காரன் என்ற எந்த விதமான வித்தியாசமும் கிடையாது.''

''மிக்க நன்றி ஐயா. இனிமேல் உங்கள் இஷ்டப்படி விசாரணையைத் தொடங்கலாம். நான் தற்கொலை செய்து கொள்ள முயன்றது உண்மைதான். அதற்கான காரணத்தைப் பற்றிக் கோர்ட்டுக்கு அக்கறை இருக்க முடியாது என்றே நினைக்கிறேன். ஆனாலும் எல்லா விஷயங்களும் இங்கே விவாதிக்கப்படும் என்று நம்புகிறேன். விசாரணையைத் தயவு செய்து தொடருங்கள்.''

நீதிபதி பிராசிக்யூடரைப் பார்த்துத் தலையசைக்கவே அவர் தம் வேலையைத் தொடங்கினார்.

''4–4–68 அன்று காலை 6 மணிக்கு மாதுங்கா ஸ்டேஷனுக்கும் தாதர் ஸ்டேஷனுக்கும் இடையில் 401ம் நம்பர் ரயில் வந்து கொண்டிருக்கும்போது உஷா என்ற பெயருடைய இந்தப் பெண் ரயிலின் குறுக்கே விழுந்து தற்கொலை செய்துகொள்ள முயற்சி செய்தாள். ரயிலின் முன் பக்கம் இருந்த 'கௌ கேச்ச'ரினால் தூக்கி எறியப்பட்டுப் பத்தடி தள்ளிப் போய் நினைவிழந்து விழுந்தாள். போலீஸ் வந்து இவள் உடலைப் பரிசோதித்துப் பார்த்தபோது ''என் தற்கொலைக்கு வெளியார் யாரும் காரணம் இல்லை'' என்று ஆரம்பித்து எழுதி வைத்திருந்த இந்தக் கடிதம்தான் இருந்தது...''

வழக்கு சீக்கிரமே முடிவடைந்துவிட்டது. தீர்ப்புச் சொல்லும்போது நீதிபதி உணர்ச்சி வசப்பட்டிருந்தார் என்பதை அவர் முகமும் அந்தக் கண்களும் குரலும் காண்பித்துக் கொடுத்தன. ''சட்டத்தின்படிதான் நீதி அமையும். நீதிக்கென்று தனிப் பார்வை கிடையாது. அதன்படி உனக்கு ஓராண்டு கடுங்காவல் தண்டனை அளிக்கிறேன்'' என்று சொல்லி முடித்து விட்டு அவசரம் அவசரமாகக் கைக்குட்டையினால் முகத்தையும் கண்களையும் துடைத்துக் கொண்டு எழுந்து போய்விட்டார்.

தீர்ப்பு வாசிக்கப்பட்டதும் கோர்ட் ஹாலில் இருந்த அப்பா அமைதியாக இருக்க எவ்வளவோ முயற்சி செய்தும் முடியாமல் மேல் துண்டை வாயில் வைத்துக் கொண்டு அழுதார். அவரைக் கைத்தாங்கலாகப் பிடித்து என்னிடம் அழைத்து வந்தார், டிலாங் ரோடு மிதிலா நிவாஸ் என். ஆர். ஐயர். என் அருகில் வந்ததும் அப்பாவாலும் பேச முடியவில்லை. என் முகத்தைப் பார்த்து விக்கி விக்கி அழுதார். என். ஆர். ஐயர் கண் கலங்கினாலும் மனம் கலங்கவில்லை. ''உன்னை நினைத்துப் பார்க்கும்போது எனக்குப் பெருமையாக இருக்கிறது அம்மா...நீ... லட்சத்தில்....இல்லை, கோடியில் ஒரு பெண். மனம் கலங்காதே. இன்னும் அப்பீல் எல்லாம் இருக்கிறது. நான் பார்த்துக் கொள்கிறேன். சட்டத்தின் பார்வையில் நீ குற்றவாளி என்று இருந்தாலும் உலகம் முழுதும் உன் பக்கம் இருக்கிறது. எதை நினைத்தும் மனத்தைத் தளர விடாதே. அப்பாவைப் பற்றியும் கவலைப்படாதே. என் கூடப் பிறந்தவர் மாதிரி அவரைப் பார்த்துக்கொள்கிறேன்'' என்றார்.

அவ்வளவுதான்; என் இரு பக்கங்களிலும் வந்து நின்ற இரு பெண் போலீஸ்காரர்கள் என்னைச் சிறைச்சாலைக்கு அழைத்துக் கொண்டு போகத் தயாராயினர்.

இங்கே வந்து கிட்டத்தட்ட நான்கு மாதங்கள் ஆகப் போகின்றன. என்னை மறந்து நேரம் போவது தெரியாமல் படிக்க எத்தனை எத்தனையோ தமிழ்ப் பத்திரிகைகளும் ஆங்கிலப் பத்திரிகைகளும் எனக்கு வந்து கொண்டிருந்தன. தமிழ்ப் பத்திரிகைகளில் மாத்திரம் அல்ல, மராத்திப் பத்திரிகைகளிலும், வங்க மொழிப் பத்திரிகைகளிலும் என்னைப் பற்றிய குறிப்புகளும் நான் போராடியதாக வர்ணிக்கப்படும் விஷயத்தைப் பற்றிய தலையங்கங்களும் உப தலையங்கங்களும் வெளிவந்தன. அவற்றையெல்லாம் எனக்கு முன் பின் பழக்கம் இல்லாத யார் யாரோ எடுத்து மொழிபெயர்ப்புடன் எனக்கு அனுப்பி வந்தார்கள். பத்திரிகைகள் மாத்திரம் அல்ல. எங்கெங்கோ ஊருக்கு ஊர் மாதர் சங்கங்களிலும் மகாநாடுகளிலும் என்னைப் பற்றியும் என் வழக்கைப் பற்றியும் விவாதித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றி அவற்றின் வாசகங்களை எனக்கு அனுப்பி வைத்தார்கள்.

மார்ச் மாத ஆரம்பத்தில் இங்கே வந்தேன். மார்ச் முழுதும் போய் ஏப்ரல், மேயும் போயிற்று. என் ஒரே அசௌகரியம் இங்கே ஒரே புழுக்கம்... காற்றின் கவடே இல்லை. புத்தகங்களினால் நான் முழுதும் விசிறிக் கொண்டே இருக்கிறேன். இரவெல்லாம் புழுக்கத்தினால் உடையெல்லாம் ஈரமாகி விடுகிறது.

ஜூலை பத்து தேதியாகி விட்டது. பதினைந்து தேதிக்குள் மழை ஆரம்பமாகிவிடும். கேரளத்தில் ஆரம்பமாகி விட்டதாகப் பத்திரிகையில் போட்டிருக்கிறது. இங்கேயும் மழை ஆரம்பித்து விட்டால் இந்தப் புழுக்கத்திலிருந்து எனக்கு விடுதலை கிடைத்து விடும்.

பன்னிரண்டாம் தேதியன்று முதன் முதலாக ஜன்னல் வழியாக மேகக் கூட்டங்கள் வானத்தில் அங்கும் இங்கும் அலைவது தெரிந்தது. அடுத்த நாளும் அதற்கடுத்த நாளும் கூட ஏதோ கன அவசரமான காரியம் இருப்பதைப் போல அந்த மேகங்கள் இங்கும் அங்கும் ஓடிக் கொண்டிருந்தன. மேகம் சேர்ந்தவுடனேயே உடலில் சற்றுக் குளிர்ந்த காற்றுகப் பட ஆரம்பித்தது. கடைசியில் பதினைந்தாம் தேதியன்று நள்ளிரவுக்குப் பின் பெரிய ஆர்ப்பாட்டத்துடன் ஒருவழியாக மழை ஆரம்பித்து விட்டது.

இந்த மழையை மனமார வரவேற்கிறேன். இதே மழைதான்... இதே மழைதான்.... எங்கள் குடும்பம் குலைந்து போவதற்கே காரணமாக இருந்தது என்பது உண்மைதான் என்றாலும் அதற்காக இயற்கையை வெறுக்க முடியுமா? மழை பூமியைக் குளிர்விக்கிறது.

இன்ப நாட்களுக்கும் ஏற்றமளிக்கிறது கோகா-கோலா! விறுவிறுப்பான அதன் தீஞ்சுவை உல்லாசத்தைப் பெருக்குகிறது. வீடோ, விளையாட்டு வெளியோ, எங்கிலும் பருகப் பருகத் தெவிட்டாத ஒரே பானம் கோகா-கோலா! அருந்தி மகிழுங்கள் ஐஸ்-குளிர் கோகா-கோலா.

புத்துணர்வூட்டிடும் அருமை, கோகா கோலாவின் பெருமை!

கோகா-கோலா, கோகா-கோலா கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

எத்தருணத்திலும் இனிமை, கோகா-கோலாவின் மகிமை!




CHCC-8-162-TAM

# இரவிலே கடுமையாகும் இருமலை நிறுத்த அதிகச் சக்தி வாய்ந்த மருந்து!










இருமல் தொடங்கும் கட்டுப்பாட்டுக் கேந்திரத்திலேயே உடனடியாகவும், அதிகச் சக்தியுடனும் செயல் புரிகிறது விக்ஸ் ஃபார்முலா 44. எனவே உங்கள் இருமல் நின்று விடுகிறது.

அதேசமயம், இந்த நவீன இருமல் மிக்சரில் சேர்ந்துள்ள மருந்துப்பொருள்கள் உள்ளே ஊடுருவி, சுவாசக் குழாய்களின் அடைப்பை நீக்குகின்றன. வலியிருந்த மார்புச் சளியை அகற்றி தொண்டை எரிச்சலுக்கும் இதமளிக்கின்றன.

அதிகச் சக்தி வாய்ந்த விக்ஸ் ஃபார்முலா 44 அருந்தி இரவில் கடுமையாகும் இருமலிலிருந்து விரைவிலே நிச்சயமான நிவாரணம் பெறுங்கள். அயர்ந்த உறக்கமும் உங்களுக்குக் கிடைக்கும்.

**விக்ஸ் பார்முலா 44 கஃப் மிக்சர்**

வியர்த்து விறுவிறுக்கும் உடலைக் குளிர்விக்கிறது. பயிர்களை யெல்லாம் உயிர்ப்பிக்கிறது. இவ்வளவு பெரிய பம்பாய்ப் பட்டினத்தின் லட்சக் கணக்கான மக்களின் தண்ணீர்த் தேவையைப் பூர்த்தி செய்ய ஏரியை நிரப்புகிறது. நான் எப்படி மழையை வெறுக்க முடியும்?

இந்த மழை எத்தனை எத்தனையோ நினைவுகளைக் கொண்டு வருகிறது. நான் பம்பாய்க்கு வந்து இரண்டு மூன்று மாதங்களில் மழை ஆரம்பித்தது. அந்தேரியில் அந்த வீட்டு மாடியில் உள்ள எங்கள் வீட்டு அறையில் உட்கார்ந்தபடியே வராந்தா வழியாகப் பார்த்தால் தெரு முழுதும் தெரியும். 'சோ'வென்று ராத்திரி முழுதும் மழை கொட்டும். இரவு பன்னிரண்டு மணிக்கு எழுந்து பார்க்கும்போதும் கொட்டிக்கொண்டிருக்கும். மூன்று மணிக்கு மீண்டும் விழித்துக்கொண்டு பார்க்கும்போதும் மழை விடாமல் கொட்டிக் கொண்டிருக்கும். தார் ரோடு தெரியாமல் ஒரே வெள்ளக்காடாக இருக்கும். காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்கவே மனம் வராது. பால் வாங்க டிப்போவுக்குப் போகும்போது மழை விட்டுப் பூமியும் வானமும் காற்றும் குளிர்ச்சியாக இருக்கும். நான் ஊட்டிக்கும் கொடைக்கானலுக்கும் போனதில்லை. இரவு முழுதும் மழை பெய்த பின்னர் காலை வேளையில் வானம் சற்று வெளிவாங்கியிருக்கும் நேரத்தில் வீசும் அந்தக் குளிர்ச்சி மிகுந்த காற்றை ஊட்டியிலும் கொடைக்கானலிலும் சிம்லாவிலும் அனுபவிக்க முடியாது என்றே தோன்றும்.

காலை எட்டு மணி வரை இல்லாத மழை சரியாக எட்டரை மணிக்குப் பள்ளிக்குக் கிளம்பும்போதுதான் மீண்டும் பலமாகக் கிளம்பும். கொட்டும் மழையில் மழைக் கோட்டணிந்து குடையுடன் தெருவில் நடப்பதும் இன்பமாகத்தான் இருக்கும்.

பம்பாய்க்கு வந்த பிறகுதான் என்றில்லை. சின்ன வயதிலிருந்தே மழைக்கு என்னைக் கவரும் சக்தி உண்டு. பதினைந்து வருஷங்களுக்கு முன்னால் திருவையாற்றில் அந்த வீட்டு வாசல் திண்ணையின் ஒட்டி நின்றபடி கூடல்வாய் வழியாகக் கொட்டும் தண்ணீரை நானும் உமாவும் கையில் பிடித்துப் பிடித்து விளையாடுவோம். அம்மா திண்ணைப் பக்கம் வந்து எங்களைப் பார்த்துவிட்டுத் திட்டும்வரை விளையாடுவோம்.

ஒன்பது மணிக்கு இருவரும் பள்ளிக்குக் கிளம்புவோம். கிளம்பும்போது மழை வந்தால் நானும் உமாவும் பழைய தாழங்குடை ஒன்றை எடுத்துக் கொண்டு அதனடியில் நாட்டியமாடிக் கொண்டே போவோம்.

எங்களுக்குப் பதினைந்து பதினாறு என்று வயது ஏறிக் கொண்டு போன பிறகும் மழையின்மீது எனக்கு ஏற்பட்ட ஆசை போகவில்லை.

உமா பதினோரு வயதானதும் பள்ளிப் படிப்பை முடித்துக் கொண்டு பிறகு வீட்டிலேயே முடங்கிக் கிடந்தாள். இரண்டு வயது சிறியவளான நான் பள்ளிக்குப் போய் வந்தேன்.

உமாவின் கல்யாணத்துக்காக அப்பாவும் அம்மாவும் யோசித்துக் கொண்டிருந்தார்கள்.




அப்பாவின் கையில் நாலாயிரம், ஐயாயிரம் வரை பணம் இருந்தது. அதைக் கொண்டு கல்யாணத்தை முடிக்க வரன் தேடிக் கொண்டிருந்தபோது தானாகவே உள்ளூர் சம்பந்தம் ஒன்று வந்தது. கீழ வீதியில் ஹோட்டல் வைத்திருந்த ஒருவருடைய ஒரே பிள்ளை. பெரிய ஹோட்டல் என்று அதைச் சொல்வதற்கில்லை. அதற்காகத் தண்ணீர்ப் பந்தலும் இல்லை. அந்த வீட்டுக்காரர்களும் உமாவை ஏற்றுக் கொள்ள வலிய வந்து கேட்டதாலும், உமா கல்யாணம் ஆன பிறகும் கண்ணெதிரிலேயே இருப்பாள் என்பதாலும் அப்பா, அம்மா இருவருக்கும் அந்த இடத்தில் மனப்பூர்வமாக விருப்பம். ஆனால் உமா சம்மதிக்கவில்லை! விதி... விதி என்றுதான் சொல்ல வேண்டும். வேறு என்னவென்று சொல்வது அதை? உமா சொன்னாள்: ''எனக்குச் சொத்துச் சுதந்திரத்தைப் பற்றிக்கூடக் கவலை இல்லை. எனக்கு வருகிறவரை ஏதாவது ஆபீஸில் நூறு ரூபாயாவது சம்பாதிக்கும் குமாஸ்தாவாகப் பாருங்களேன்; சந்தோஷமாகக் கழுத்தை நீட்டுகிறேன். ஹோட்டல்காரருக்கு வாழ்க்கைப்பட்டால் அவர் சதா வீட்டையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்பார்''... அவள் சொல்வதும் அம்மா அப்பாவுக்கு ஒரளவு நியாயம்தான் என்றுபட்டது. ஆகவே அந்தப் பேச்சு அத்துடன் முடிவடைந்து விட்டது. அப்பா ரிடையராவதற்கு இன்னும் இரண்டு வருஷங்கள் இருந்தன. உமாவுக்கும் பதினெட்டு வயதுதான் ஆகியிருந்தது.

அப்பா ரிடையரானால் பிராவிடெண்ட் பணம் வேறு வரும். அதையும் வைத்துக் கொண்டு எங்கள் இருவர் கல்யாணத்தையும் ஒரே பந்தலில் முடித்து விட்டு நிம்மதியுடன் கிராமத்தில் உள்ள வீட்டுக்குப் போய்விடலாம் என்று அப்பா சொல்லிக் கொண்டிருந்தார்.

அதற்குள் வேறொரு சந்தர்ப்பம் தானாக வந்தது. அதுவரை பெரிய கோயிலாலும் குளத்தாலும் மாத்திரமே பிரசித்தி அடைந்திருந்த அந்த ஊர், பெரிய சர்க்கரை ஆலை ஒன்றினாலும் பெயர் பெற ஆரம்பித்தது. ஆலை என்றால் சின்னப் பட்டறை இல்லை. ஊருக்குத் தெற்கே இரண்டு மைலில் பெரிய இடத்தில் அமைந்த அந்தப் பிரும்மாண்டமான தொழிற்சாலையை அமைத்துக் கொடுக்க ஜெர்மனியிலிருந்து இயந்திரங்களும் நிபுணர்களும் வந்தார்கள். அதிலிருந்து இந்த ஊரைச் சுற்றித் தலைமுறை தலைமுறையாக நெல்லையே பயிர் செய்து வந்தவர்கள் எல்லோரும் கரும்பு பயிரிட ஆரம்பித்தார்கள். அத்தனை கரும்பையும் விழுங்கிச் சர்க்கரையாக மாற்றிய அந்த ராக்ஷஸ ஆலை "இன்னும் கரும்பைக் கொண்டு வா, கொண்டு வா" என்றது. அத்தனை கரும்புடன் உமாவுக்கும் அந்த மில்லில் வேலை கிடைத்தது. உமாவுடன் இன்னும் இரண்டு மூன்று பெண்களும் அங்கே வேலை செய்தார்கள். அதுவரையில் அவளை வேலைக்கு அனுப்புவதைப் பற்றி நினைத்துக்கூடப் பார்த்திராத அம்மாவும் அப்பாவும் அதை முதலில் வரவேற்கவில்லை. ஆனால் உமா ஒரு மாதம் வேலை பார்த்து முழுதாக நூற்றைம்பது ரூபாயை வீட்டில் கொண்டு வந்து கொடுத்தபோது அம்மா பூரித்துப் போனாள். வாத்தியாரான அப்பா ஒரு மாதத்துக்கு நூற்றைம்பது ரூபாய் என்றால் ஒரு வருடத்துச் சம்பளம் என்ன, இப்படி இன்னும் இரண்டு வருஷங்கள் வேலை பார்த்தால் கிடைக்கும் மொத்தச் சம்பளத் தொகை எவ்வளவு என்று வாயாலேயே கணக்குப் போட்டுப் பார்த்து அதைக் கொண்டு உமாவின் கல்யாணத்தை இன்னும் எவ்வளவு சிறப்பாக நடத்தலாம் என்று கணக்கிடத் தொடங்கினார்.

அந்த வருஷம்தான் நான் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்துவிட்டு வீட்டோடு அடைந்து கிடக்க ஆரம்பித்திருந்தேன்.

வெயில் நாளிலும் மழை நாளிலும் உமா தவறாமல் கையில் குடையுடன் தொழிற்சாலைக்குக் கிளம்புவாள். எங்கள் தெரு வடக்கு வீதியுடன் சேருமிடத்தில் பஸ் ஸ்டாப். அங்கே பஸ் ஏறினால் கீழ வீதியையும் தெற்கு வீதியில் பாதி தூரத்தையும் கடந்த பிறகு மீண்டும் தெற்கு நோக்கிப் போய்க் கடைத் தெருவில் புகுந்து புறப்பட்டு, ஆற்றைக் கடந்து, வயல் வெளிகளில் இரண்டு மைல் போனால் தொழிற்சாலை வந்துவிடும். மீண்டும் மாலை ஐந்தரை மணிக்குச் சங்கு ஊதியவுடன் சாலையில் வந்து நின்றால் டவுன் பஸ் அங்கே நிற்கும்.

உமா வேலைக்குப் போய்க் கிட்டத்தட்ட ஒரு வருஷம் ஆகியிருக்கும். அவள் பெயரில் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு மேல் பாங்கில் கணக்கு ஏறியிருந்தது.

குளிர் காலமும் கோடைக் காலமும் முடிந்து ஐப்பசி கார்த்திகை மழைக்காலமும் வந்தது. உமா தினமும் குடை எடுத்துக் கொண்டு போயும் பாதி நாள் அங்கே வெட்ட வெளியில் பேயாய் அடிக்கும் மாலை மழைக்குப் பதில் சொல்ல வகை யறியாமல் திண்டாடும் அந்தக் குடை, உடலில் பாதிப் புடவையை நனைக்க ஒரு வழியாக வீட்டுக்கு வந்து சேருவாள்.

அப்படி ஒரு நாள் மாலை நேரம்.

ஐந்து மணிக்கே 'கும்' என்று இருட்டிக் கொண்டு வந்து விட்டது.

மழைக் குளிருக்கு இதமாக அம்மா வெங்காயப் பக்கோடா செய்து கொண்டிருந்தாள். அப்பா பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் சூடான பக்கோடாவை ருசித்து ஒரு கை பார்த்த பிறகு அம்மாவும் நானும் எங்கள் பங்கை எடுத்துக் கொண்டோம். உமாவுக்காகத் தனியாக எடுத்து வைத்து மூடிவிட்டுச் சமையலறையைக் காலி செய்து கொண்டு கூடத்துக்கு வந்தோம். உமாவுக்கு வெங்காயப் பக்கோடா என்றால் உயிர்.

ஐந்தரை மணிக்குச் சங்கு ஊதினால் ஐந்து நாற்பதுக்கு பஸ் ஸ்டாண்டுக்கு வந்து ஐந்தே முக்காலுக்கு வரும் பஸ்ஸில் ஏறி ஆறேகாலுக்கு வடக்கு வீதி முனையில் இறங்கி ஆறு இருபதுக்குள் உமா வீட்டுக்கு வந்து விடுவாள்.

ஐந்து மணி சுமாருக்கு வானத்தைப் பார்த்து அப்பா பயந்து போய், "இது என்ன இது, இப்படி இருட்டிக் கொண்டு வருகிறதே! நான் வேண்டுமானால் போய் அவளை அழைத்துக் கொண்டு வரட்டுமா?" என்று கிளம்பினார். அம்மா எதுவும் சொல்லவில்லை. வானத்தைப் பார்க்கப் பார்க்க அம்மாவுக்கும் பயமாக இருந்திருக்க வேண்டும். திடீரென்று தெற்குக் கோடிக்கும் வடக்குக் கோடிக்கும் ஒரு கண நேரம் பெரிய வில்லாகத் தோன்றி மறையும் மின்னலும் அதைத் தொடர்ந்து தேவேந்திரனின் சாட்டையாகக் கேட்கும் இடி முழக்கமும் என் மனதிலும் திகில் ஊட்டியது.

அப்பா குடையை எடுத்துக் கொண்டு பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தார்.

மணி ஆறு இருபது, ஆறரை ஆயிற்று.

ஏழும் ஆயிற்று.

கடைசியாக ஏழு பதினைந்துக்கு உமா மாத்திரம் தனியாக வந்தாள். அவளைப் பார்த்த பிறகுதான் அம்மாவுக்கு உயிர் வந்தது. அந்தக் கணத்தில் அப்பா அவளைத் தேடிக் கொண்டு போயிருந்தது கூட அம்மாவுக்கு மறந்து போய் விட்டது. "இது என்னடி இது, இப்படித் தொப்பலாக நனைந்து போய் வருகிறாய்?" என்று கேட்டபடியே அவள் கையிலிருந்து குடையையும் டிபன்பாக்ஸையும் வாங்கிக் கொண்டாள். உமா முற்றத்தில் இறங்கிக் கால் சேற்றைக் கழுவிக் கொண்டு வந்ததும் அம்மா காய்ந்த துண்டை எடுத்து முதலில் தலையைத் துடைக்க ஆரம்பித்தாள். "தலையைக் கூட அப்புறமாகத் துவட்டிக் கொள்ளலாம். முதலில் புடவையை மாத்திக்கொள்" என்றாள். கொடியில் காய்ந்திருந்த புடவையை நான் எடுத்துக் கொடுத்தேன். உமா மௌனமாக

அடேயப்பா, வளர்ச்சியின் உச்ச நிலை!
இப்படியொரு மகத்தான மாறுதலை
விளைவிக்கமுடியுமா ஒரு டானிக்?



# ஆம், வளர்ச்சிக்கான பசியை உங்கள் குழந்தைக்கு வளமுடன் வழங்குவது இன்க்ரிமின்*

இன்க்ரிமின் டானிக் பிரத்தியேகமாகப் பசியைத் தூண்டி, வயிறார உண்ணும் மிகுதியான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றி, வாட்டசாட்டமாக வலுவோங்கச் செய்கிறது. சாப்பிடும் புரத சத்து அனைத்தையும் நன்கு பயன்படுத்திக்கொள்ள உதவுகிறது இன்க்ரிமின். நம் உணவில் இல்லாத ஒரு முக்கிய அமினோ அமிலம் செறிந்துள்ள டானிக். வளரும் வயதினிலே (4 வாரம் முதல் 14 வயது வரை) அன்றாடம் கொடுங்கள் : செர்ரிப் பழச் சுவை ததும்பும் இன்க்ரிமின். மறவாதீர்கள் :

## இதுவே கண்கண்ட வளர்ச்சிப் பருவம், இன்க்ரிமின்* பருவம்

◄ பெரிய குழந்தைகளுக்கு (இரும்புச் சத்து அடங்கிய) இன்க்ரிமின் ஸிரப்

இளம் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ் ▼









Lederle

எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன. உலகெங்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு பெயராகிய லெடர்லே தயாரிப்பது இன்க்ரிமின். லெடர்லே டிவிஷன், ஸையனமிட் இந்தியா லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 6577, பம்பாய்-18.

*அமெரிக்கன் ஸையனமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

அதை இடுப்பில் சுற்றிக் கொண்டாள். ''என்ன வேலை வேண்டியிருக்கு? பேசாமல் விட்டுத் தொலைத்து விடலாம் என்றால் ஆசை விட மாட்டேன் என்கிறதே!....'' என்று பிரலாபித்துக் கொண்டே உள்ளே போய் அடுப்புத் தணலை அள்ளி எடுத்துக் கரண்டியில் சாம்பிராணியையும் போட்டுக்கொண்டு உமாவின் தலையை அதில் காட்டினாள்.

அப்போதுதான் அப்பா உள்ளே வந்தார். உமாவைப் பார்த்ததும் அப்பாவுக்கும் நிம்மதி வந்தது மாதிரி இருந்தது. ''இந்த மழையிலே எப்படி வந்தாய்?'' என்று கேட்டபடியே அவளைப் பார்த்தார் அப்பா.

''பஸ்ஸிலேதாம்ப்பா... பஸ் இன்னிக்கு ரொம்ப லேட்டாக வந்துதுப்பா...'' என்றாள்.

அவளுக்கு அப்பா தன்னைத் தேடிப் போயிருந்தது தெரியாது. உமாவின் பதிலைக் கேட்டு அப்பாவின் முகம் மாறியது போல் தோன்றியது. ''என்னது...? பஸ்ஸிலேயா வந்தாய்? பஸ்ஸிலேயா....?'' என்று திருப்பித் திருப்பி அவநம்பிக்கையுடன் கேட்பது மாதிரி கேட்டார்.

''ஆமாம்ப்பா...'' என்று பதில் சொன்னாள் உமா.

நான் உள்ளேயிருந்து பக்கவடாத் தட்டை எடுத்துக்கொண்டு போய் அவளிடம் கொடுத்தேன்.

அதில் ஒரே ஒரு துண்டை மாத்திரம் எடுத்துக் கொண்டு, ''அப்புறமா எடுத்துக் கொள்கிறேன்'' என்று சொல்லிவிட்டாள்.

அப்பா இரண்டு நிமிஷங்கள் அப்படியே நின்றுவிட்டு உலர்ந்த வேஷ்டி கட்டிக் கொள்ள நகர்ந்தார்.

சாப்பிடும்போது அம்மா ''என்னடி இது, உன் முகம், கண் எல்லாம் வீங்கினது மாதிரி தெரிகிறது? கண் எல்லாம் ஏன் இப்படிச் சிவந்து கிடக்கு?'' என்றாள்.

உமா சரியாகப் பதில் சொல்லவில்லை. சரியாகச் சாப்பிடவும் இல்லை.

அப்பாவும் சரியாகச் சாப்பிடவில்லை. அம்மாவுக்கும் எனக்கும் எதுவுமே புரியவில்லை.

மறுநாள் காலையில் மணி எட்டு ஆகியும் உமா ஆபீசுக்குக் கிளம்பும் பரபரப்பைக் காண்பிக்கவில்லை. அம்மாவாகக் கேட்டபிறகு தான் ''நான் இனிமேல் ஆபீஸ் போகப் போகிறதில்லை'' என்றாள்.

''அப்பாடா... எனக்கும் உயிர் வந்தாப் போல இருக்குதுடியம்மா. நீ ஆபீசுக்கும் போக வேண்டாம். கல்யாணத்துக்கும் பணம் சேர்க்க வேண்டாம். எல்லாம் இருக்கிற அழகுக்கும் பணத்துக்கும் மாப்பிள்ளை வந்தால் போதும். நானே சொல்லணும்னு நினைச்சேன். நல்ல வேளை... அப்பாவிடம் நானே சொல்லி விடறேன்'' என்று ஏதோ தலையிலிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கி விட்டதைப் போல் அம்மா நிம்மதியாக மூச்சு விட்டாள்.

அம்மா திண்ணையிலிருந்த அப்பாவிடம் போய், ''உமா ஆபீசுக்குப் போகவில்லை என்கிறாள். இந்த மழையில் போக முடிய வில்லையாம். அப்படியாவது போய்ச் சம்பாதித்து என்ன ஆகணும்? வேலையையே விட்டுவிடச் சொல்லிவிட்டேன்'' என்றாள்.



''நறுக்கின வெங்காயத்தைக் கண்ணில் ஒற்றிக் கொள்ளம்மா! கிளிசரின் ஸ்டாக் இல்லே.''

அப்பா அம்மாவின் முகத்தையே பார்க்காமல் ''சரி'' என்றார்.

அம்மா உள்ளே வந்து ''அப்பாவிடம் சொல்லி விட்டேன்'' என்று அறிவித்தாள்.

உமா ஆபீசுக்குப் போகவில்லை. எல்லோரையும்விட எனக்கு இது நிம்மதியாக இருந்தது. மீண்டும் இருவரும் குளிப்பதற்கும் கோவிலுக்கும் சேர்ந்து செல்ல ஆரம்பித்தோம். அப்பாவிடம் வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு அம்மாவையும் அழைத்துக் கொண்டு சினிமாவுக்கும் போய் வந்தோம்.

ஒரு நாள் காலை எட்டு மணி இருக்கும். குடத்தை எடுத்துக் கொண்டு குளிக்கக் குளத்துக்குப் போன அம்மா ஈரப் புடவையுடன் உள்ளே வந்தவள் குடத்தை நீருடன் கூடத்தில் 'டங்' என்று வைத்துவிட்டு அப்படியே தரையில் விழுந்தாள். ''என்னம்மா இது; என்ன செய்கிறது?'' என்று நான் பதறிப் போய் அம்மாவைத் தூக்கிப் பார்த்தேன்.

''அம்மா...அம்மா... என்னம்மா? மயக்கமாக இருக்கிறதாம்மா?'' என்று உமாவும் அம்மாவின் முகத்தைத் திருப்பினாள்.

உமாவின் முகத்தைப் பார்த்த அம்மா நடுநடுங்கினாள். ''ஐயோ...என்னைத் தொடாதேடி... ஐயையோ!... தொடாதேடி...... ஐயோ! நான் என்ன செய்வேன்? எப்படி இனிமேல் இந்த உடலில் உயிரை வைத்துக் கொண்டு நடமாடுவேன்...?'' என்று 'ஹோ' வென்று அழுதாள்.

உமா வாசற் கதவைத் தாளிட்டு விட்டு வந்து ''என்னம்மா...?'' என்று மீண்டும் கேட்டாள்.

''ஏண்டி பாவி! அன்னிக்குக் கேட்டபோது 'பஸ்ஸிலே வந்தேன்' என்று பொய்தானே சொன்னே...? ஐயையோ பாவி...! ஏண்டி இன்னும் உயிரோடு இருக்கே...!'' அம்மா மீண்டும் தரையில் புரண்டு அரற்றினாள்.

"ஐயோ...: அம்மா....!" என்று உமா அப்படியே தரையில் விழுந்தாள்.

அம்மா எழுந்து வந்து உமாவின் தலைமயிரைப் பிடித்து எழுப்பி, "சொல்லுடி... பாவி, சொல்லுடி... பெற்ற வயிற்றுக்குக் குளிர்ச்சியாக இருக்கும்டி. சொல்லுடி... எத்தனை நாளாக இப்படி நடந்தது? ஐயோ! குளத்திலே எல்லோரும் பேசிக்கிறாளே... எல்லார் காதிலேயும் விழுந்து கடைசியா பெத்தவா காதிலே இந்தச் சமாசாரம் விழும்படியாச்சே... என் உடம்பிலேருந்து உயிர் 'கப்' என்று போகவில்லையே..." என்று கதறினாள்.

நான் மரமாய் நின்றேன்.

மீண்டும் அம்மா உமாவின் தலைமயிரைப் பிய்த்தெடுத்தாள். "சொல்லுடி! அதற்காகத்தான் வேலை வேண்டாம்னியா.... சொல்லுடி..."

உமா உறுதியுடன் எழுந்து உட்கார்ந்தாள். "இதோ பார் அம்மா. நீ பயப்படுகிற மாதிரி ஒன்றும் ஆகிவிடவில்லை. நடந்ததை அப்படியே சொல்லிவிடறேன். என்னை நம்பு.... அன்னிக்கு... மழை ரொம்பக் கொட்டின அன்னிக்கு மானேஜர் எங்களை எல்லாரையும் வழக்கத்தை விட முன்னாலேயே போயிடலாம்னார். நான் நேரே ரோட்டுக்கு வந்து பஸ்ஸுக்காக நின்றேன். கொஞ்ச நேரத்தில் மானேஜர், காரில் வந்தவர், "ஏறிக்கொள். வடக்கு வீதியிலே கொண்டு விட்டுடறேன்னார். முதலில் வேண்டாம்னேன். வானம் முழுவதும் கறுத்து மழை வலுத்தது. மின்னலும் இடியும் பயமாக இருந்தது. சரின்னு காரில் ஏறிண்டேன். கார் தெற்கு வீதி தாண்டியதும் மேல வீதியில் திரும்பாமல் நேரே கன்னூர்குடி ரோட்டில் போயிற்று. "ஏன் இப்படிப் போகிறது?" என்று கேட்டேன். அவன் ஏதோ சொன்னான். நான் கேட்டுக் கொண்டிருந்தபோதே ஊருக்கு வெளியில் வந்து விட்டது. அவன் காரை நிறுத்தி விட்டு உட்பக்கம் எட்டிப் பார்த்தான். நான் நகர்ந்து கொண்டேன். அவன் உள்ளே வந்து என்னைப் பிடிக்க வந்தான். 'சீ!' என்று அவன் முகத்தில் காறி உமிழ்ந்து விட்டுத் திமிறிக் கொண்டு ஓடி வந்து விட்டேன். ஓட்டம் ஓட்டமாக வந்தேன். மழையில் ஆள் நடப்பதே தெரியவில்லை. இந்த வேளையில் என்னை யாரும் பார்த்திருக்க மாட்டார்கள் என்றே நினைத்தேன். வீட்டுக்கு வந்ததும் உன்னிடம் சொல்லணும்னுதான் நினைத்தேன். ஆனால் வாய் விட்டுச் சொல்லத் தைரியம் வரவில்லை.. அம்மா... உன்மேல் ஆணையாக, உஷாவின் மேல் ஆணையாக, அப்பாமேல் ஆணையாக, இத்தனையும் பார்த்துக் கொண்டிருக்கிற வேதகிரீசுவரர் ஆணையாக இதுதான் நடந்தது. என்னை நம்பும்மா... ஐயோ... அம்மா..." என்று உமா அழுதாள்.

நான் அத்தனையையும் கேட்டுக் கொண்டு மரமாகி நின்றேன்.

உமாவும் அம்மாவும் ஒருவரை யொருவர் கட்டிக் கொண்டு அழுதார்கள். அம்மா பெண்ணின் வாழ்க்கை எவ்வளவு கேவலம், ஒரு சின்னத் தப்பால் எத்தனை பெரிய விபரீதம் எல்லாம் விளையும் என்று விவரித்தாள்.

வாசற் கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. நான் போய்க் கதவைத் திறந்ததும் அப்பா உள்ளே வந்தார். அழுகையும் விம்மலுமாக அப்பாவிடம் எல்லாவற்றையும் அம்மா எடுத்துச் சொன்னாள். அப்பா எதுவுமே பதில் சொல்லவில்லை.

அதற்குப் பிறகு அந்த வீட்டில் நிலவிய களையும் நிம்மதியும் அன்பும் உயிரும் போக்கென்று போய் விட்டன.

அப்பா உமாவையோ என்னையோ கூட நிமிர்ந்து பார்ப்பதில்லை.

அம்மாவும் மெலிந்து தேய்ந்து நலிந்தாள்.

அது சின்ன ஊர். என்னதான் 'பிறர் முகத்தை நாமாகப் பார்க்கவேண்டாம் என்று இருந்தாலும் எங்காவது யாராவது கண்ணில் பட்டுக் கொண்டுதான் இருந்தார்கள். குளத்துக்கும் மற்ற இடங்களுக்கும் போவதைக் குறைத்துக் கொண்டு விட்ட அம்மா, ஒரு நாள் தன் வேதனையையெல்லாம் எடுத்துச் சொல்லக் கோயிலுக்குப் போனவள் முன்பொருநாள் குளத்திலிருந்து திரும்பி வந்த நிலையில் உள்ளே வந்து விழுந்து புரண்டு அழுதாள். "கோயிலிலே இதைப் பற்றி எல்லோரும் பேசிக் கொள்கிறார்களே... நான் போனவுடன் அப்படியே 'டக்' என்று பேச்சை நிறுத்தி விட்டு என் முகத்தைக் கூடப் பாராமல் ஓடுகிறார்களே... நான் என்ன செய்தேன்...?" என்று 'கோ'வென்று அழுதாள்.

அம்மாவின் உயிர்க் கொடியில் புழு அரிக்க ஆரம்பித்தது.

அப்பாவிடம் தனிமையில் உமாவுக்கு ஏதாவது வரன் பார்த்துத் தள்ளிவிடப் பார்க்கும்படி அடிக்கடி சொன்னாள்.

மௌனம்தான் அப்பாவின் பதில். ஒரு நாள் அப்பா பயந்து நடுங்கிய முகத்துடன், "உமாவிடம் ஏதாவது மாறுதல் தெரிகிறதா? காலை வேளையில் வயிற்றைப் புரட்டி ஏதாவது செய்கிறதா?" என்று அம்மாவிடம் கேட்டபோது அம்மா அப்படியே அப்பாவின் கைகளைப் பிடித்துக் கொண்டு விட்டாள். "என்ன சொல்கிறீர்கள் நீங்கள்....? ஊரிலே உள்ளவர்கள் பாவிகள் இல்லை... நீங்கள்தான் பெரிய பாவி..." என்றாள்.

அம்மா கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்தாள்.

ஒரு வருஷம்... ஒரே வருஷம்... அம்மாவின் உடலில் எண்ணி எடுக்கலாம்போல் எலும்புகள் தெரிய ஆரம்பித்தன.

அம்மாவின் உடலிலிருந்து உயிர் பிரிந்து கொண்டிருக்கும் வேதனை தாளாமல் அப்பா உமாவுக்காக எங்கெங்கோ வரன் தேட ஆரம்பித்தார்.

எங்கே போய் விட்டு வந்தாலும், "'உங்கள் பெண் வேலை பார்த்தாளாமே' என்று கேட்க ஆரம்பித்து விடுவார்களோ என்று குலை நடுக்கமாக இருக்கிறது..." என்று திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தார்.

அம்மா வாசல் பக்கம் கூட எட்டிப் பார்ப்பதில்லை. வாசலில் ஸ்வாமி வந்தால் கூட வெளியில் வந்து தரிசிப்பது இல்லை.

**(அடுத்த இதழில் முடிவுறும்)**

# அழகிய கரங்களின் மீது அருவருப்பான ரோமமா ?

அருவருப்பான ரோமம் உங்கள் அழகை ஏன் கெடுக்க வேண்டும்? இப்போது அதை ஒழிப்பது மிகவும் எளிது. ரேஸர் தேவையில்லை. அது ஆண்களுக்கு மட்டும் தான். தவிர க்ஷவரம் செய்தால், உரோமம் வேகமாக வளருகிறது... மென்மையற்றும்கூட. ஒப்பனைசெய்து மறைக்கவா? ஒருவராலும் மாற்ற முடியாது. ஆனால் இப்பிரச்னைக்கு எளிதான, அபாயமற்ற ஒரு பெண்மை வழி இருக்கிறது. அதுவே மென் மணம் கொண்ட ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர். சற்றே தடவுங்கள். சில நிமிடங்களுக்குப் பிறகு துடைத்தெறியுங்கள்...பட்டுப்போன்ற மென்மை வாரக்கணக்கில் கிடைக்கும்.




**ஆன் பிரெஞ்சு**

ஹேர் ரிமூவர்

அழகிய முறையில் உரோமத்தை அகற்றுகிறது.

57 HR-172-Tam

ரெஜிஸ்டர்டு டிரேட்: ஜெப்ரி மானேர்ஸ் அண்டு கம்பெனி லிமிடெட்




ஆகாசவாணி :

**செய்திகள்**

வாசிப்பது:

**'கலைச்செல்வன்'**

டீக்கடைகளைத் தேசியமயமாக்கக் கொண்டு வரப்பட்ட மசோதா, பார்லிமெண்டின் இரு சபைகளிலும் நிறைவேறிய பிறகு ராஷ்டிரபதியின் அங்கீகாரம் பெற்றிருக்கிறது.

தேசிய "சாயாக் கடைகள் அபிவிருத்தி இலாகா" மந்திரியாக திரு பி. கே. பி. நாயர் இன்று பதவி ஏற்றார்.

டீ என்ற பெயரை 'சாயா' என்று தற்போது மாற்றும் எண்ணம் தமக்கு இல்லை என்று பிரதம மந்திரி அறிவித்திருக்கிறார்.

ஆளும் கட்சியின் முழு ஆதரவுடனும் சில எதிர்க் கட்சிகளின் சிறுபான்மை ஆதரவுடனும் டீக்கடைகளைச் சர்க்கார் உடைமையாக்கும் மசோதா நிறைவேறியது. மசோதா நிறைவேறிய போது உறுப்பினர்கள் பலர் மேசைகளைத் தட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். அப்போது அங்கத்தினர்கள் அனைவருக்கும் சூடான 'சிங்கிள்' டீ வழங்கப்பட்டது. மசோதா மீது இரண்டாவது வாசிப்பு ஏற்பட்டபோது, "சோஷலிசத்தை நோக்கி நாடு முன்னேறும் படிகளில் இதுவும் ஒன்று" என்று கூறி இதைச் செய்த பிரதமரைப் பாராட்டிச் சிலரும், தங்களுக்குச் சிறந்த தேநீர் வழங்கப்பட்டமைக்கு நன்றி தெரிவித்துப் பல உறுப்பினர்களும் பேசினர். அதன் பிறகு மசோதா ராஜ்ய சபையிலும் நிறைவேறி ராஷ்டிரபதியின் அங்கீகாரம் பெற்றது!

புதிதாக ஏற்படுத்தப்பட்டுள்ள டீக்கடைகள் அபிவிருத்தி இலாகாவின் மந்திரியாக திரு பி. கே. பி. நாயர் பதவி ஏற்றார். நேற்று காலை ராஷ்டிரபதி பவனில் நடந்த ஒரு பிரத்தியேக விழாவில் அவருக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைக்கப்பட்டது. திரு நாயர் பாலக்காட்டில் பிறந்தவர். சாதாரணக் குடும்பத்தில் பிறந்த அவர் ஒரு டீக்கடைத் தொழிலாளியாக தம் வாழ்க்கையைத் தொடங்கினார். தமது சொந்த முயற்சியால் மத்திய மந்திரியாக உயர்ந்துள்ள இவரது திறமையை ராஷ்டிரபதி வெகுவாகப் பாராட்டினார்.

தாம் பதவி ஏற்றதையடுத்து லோக்சபாவில் மந்திரி திரு நாயர் சில தகவல்களை இன்று வெளியிட்டார். தேசியமயமாக்கப்பட்டுள்ள டீக்கடைகளில் மிகவும் குறைந்த விலையில் டீ கிடைக்கும்படி தாம் ஏற்பாடு செய்யப் போவதாக அறிவித்த அவர், ஏழைகளின் நலனே அரசாங்கத்தின் நோக்கமாகும் என்று குறிப்பிட்டார்.

அரசாங்க டீக்கடைகளில் குறைந்த விலைக்கு விநியோகிக்கப்படும் தேநீரின் தரம் குறைந்து விடுமோ என்று சில உறுப்பினர்கள் கவலை தெரிவித்தனர். அதற்குப் பதில் கூறும் வகையில் மந்திரி, அரசாங்க டீக்கடைகளில் விற்கப்படும் டீயின் தரத்தை உயர்த்தத் தாம் ஓர் பதினைந்தாண்டுத் திட்டம் வகுத்துள்ளதாயும், அதற்குள் டீயின் தரம் கணிசமான முறையில் அபிவிருத்தி அடையும் என்று தாம் நம்புவதாயும் தெரிவித்தார். டீக்கடைகள் தேசியமயமாக்கப்பட்ட முதல் ஆண்டில் அரசாங்கத்துக்குச் சுமார் ரூ. 56,33,463-43பை. கிடைக்கக் கூடும். இதனால் நாட்டின் பொருளாதாரத்தில் முன்னேற்றம் ஏற்படும்" என்று அவர் அறிவித்தார்.

"டீக்கடைகள் தேசியமயமாக்கப்பட்ட பிறகு, அதாவது கடந்த இரண்டு, மூன்று நாட்களுக்குள்ளாகவே, அரசாங்க டீக்கடைகளில் விற்கப்படும் டீயில், 'சுறுசுறுப்பூட்டும் தன்மை' குறைந்து விட்டது என்று மக்களிடையே அதிருப்தி நிலவுவதாக பரவியுள்ள வதந்தி ஆதாரமற்றது. இருப்பினும்,



இந்த விஷயம் உண்மையா என்று ஆராய, கூடிய சீக்கிரமே, ஓர் 'உயர்மட்டக் கமிட்டி' அமைக்கப்படும் என்று மந்திரி திரு பி.கே.பி. நாயர் தெரிவித்தார்.

நேற்று இரவு அகில இந்திய டீக்கடைத் தொழிலாளர்கள் சம்மேளனத்தின் சார்பில் அளிக்கப்பட்ட வரவேற்பில் பலர் பிரதமரைப் பாராட்டிப் பேசினர். பிரதமருக்கு ஒரு வெள்ளித் தேநீர்க் கோப்பை பரிசளிக்கப்பட்டது. பரிசைப் பெற்றுக் கொண்டு பேசுகையில் பெரும்பான்மை மக்களின் ஆதரவு தமக்கு இருப்பதாயும், சில வகுப்புவாதக் கட்சிகள் அரசியல் நோக்குடன் இதை எதிர்ப்பதைத் தாம் பொருட்படுத்தவில்லை என்றும் பிரதமர் கூறினார்.

மக்களிடையே டீ அருந்தும் பழக்கம் பெருகியதால் டீக்கடைகளில் பணமுடக்கம் அதிகரித்து விட்டது என்று அரசாங்கத்துக்குத் தகவல் கிடைத்தது. இதைத் தடுக்க

வேண்டியது அவசியம் என்று தாம் கருதியதாகவும், இவ்வாறு டீக்கடைகளில் முடங்கிக் கிடக்கும் பணம் ஏழை மக்களின் நலனுக்குப் பயன்பட வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் தாம் இந்த நடவடிக்கையை மேற்கொண்டதாயும் பிரதமர் தம் உரையில் கூறினார்.

இதற்கு வெளிநாட்டுத் தூண்டுதல் காரணமாக இருக்கலாம் என்ற ஒரு பத்திரிகைச் செய்தியை அவர் திட்டவட்டமாக மறுத்தார்.

டீக்கடைகள் தேசிய மயமாக்கப்பட்டதன் எதிரொலியாகத் தாமும் மற்றும் பல சக மந்திரிகளும் காப்பி அருந்துவதை விடுத்து டீ அருந்துவதைப் பழக்கத்துக்குக் கொண்டு வர முடிவு செய்துள்ளதாக, பலத்த கர கோஷத்துக்கிடையில் பிரதமர் வெளியிட்டார்.

அடுத்து நிருபர்கள் கூட்டத்தில் அவர் பேசுகையில்,

"இனி அரசாங்க டீக்கடைகளில் ஏற்படும் வேலைவாய்ப்புக்களில் "நாயர்" அல்லாதாரைப் பின்தங்கிய வகுப்பினராகக் கருதி அவர்களுக்கு அதிக வேலைவாய்ப்பு அளிக்க வேண்டும் என்று 'மக்கள் உரிமைக் கழக'ப் பிரமுகர் திரு தமிழன்பன் விடுத்துள்ள வேண்டுகோளை அரசாங்கம் பரிசீலனை செய்யும்" என்றார்.

"'டீ' என்ற பெயர் அந்நிய மொழிச் சொல்லாதலால் அதனை நீக்கி, அரசாங்க தஸ்தாவேஜுகளில் அது 'சாயா' என்றே வழங்கப்பட வேண்டும்" என்ற ஓர் வடநாட்டு அரசியல் பிரமுகர் கருத்தை அவர் நிராகரித்து விட்டார்.

"டீ என்பது அந்நிய மொழியாக இருப்பினும் சிறிது காலத்துக்கு, அதாவது தமிழ்நாடு முதலிய காப்பி அருந்துவோர் அதிகமுள்ள மாநிலங்களிலுள்ளோர் அதைச் 'சாயா' என்று அழைக்க விரும்பும் வரை டீ என்பதே அரசாங்கப் பெயராக இருக்கும். நாட்டில் 72 சதவிகித மக்கள் அதைச் "சாயா" என்றே அழைப்பதால் முன்னே குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு, ஒரு "பெயர்த் திருத்த மசோதா" மூலம் அதன் பெயர் 'சாயா' என்று மாற்றப்படும். 'சாயா' என்பது இந்திச் சொல் என்பதால் தென்னிந்தியாவிலிருந்து பலத்த எதிர்ப்பு ஏற்படலாம் என்று கருதியே தாம் இவ்வாறு செய்திருப்பதாக அவர் கூறினார்.

# வான்முகிலே வா!

வையம் செழித்திட வேண்டுமெனில்—
—மனம்
வைத்து வழங்கிட வேண்டும்
செய்யும் அறங்கள் சீர்பெறவே—உன்
சித்தை இரங்கிட வேண்டும்

காணி விளைந்திட வேண்டுமெனில் —
எழில்
கண்மழை சிந்திட வேண்டும்
பூணும் வறுமை தொலைந்திடவே - உன்
பூமுகம் காட்டிட வேண்டும்!

சோதனை செய்தது போதுமே — நீ
சோவெனப் பெய்திட வேண்டும்
வேதனை தீர்த்திட வேண்டிடில்—இவ்
வெற்றித் தமிழகம் வந்திடு!

இல. வாகனாதன்

# கால்கேட் மூலம், வாய்-நாற்றத்தைத் தடுத்து நாள்முழுதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

COLGATE DENTAL CREAM SUPER SIZE

COLGATE DENTAL CREAM SUPER SIZE

5 வசதியான சைஸ்களில் கிடைக்கிறது!



ஏனெனில்:

ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் க்ரீம் வாய்நாற்றத்தையும் பற்சிதைவை விளைவிக்கும் கிருமிகளையும் 85 சதவிகிதம் வரை அகற்றுகிறது.

கால்கேட் 10 க்கு 7 பேர்களில் வாய்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறதென்றும், உணவு உட்கொண்ட உடனேயே கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால் இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன! இந்த நிரூபணத்தைப் பெற்றிருப்பது கால்கேட் மட்டுமே!

அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி. கால்கேட் டென்டல்க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாது பல் துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இன் மூச்சோடு வெண்மையான பற்களும் பெறவே...மற்றெந்தப் பற்பசையையும்விட உலகிலே அதிக மக்கள் கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்.




*நீங்கள் பற்பொடியை விரும்பினால், இப்பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத்பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பா பல மாதங்களுக்கு வரும்!*

C.G.37 TM

# சஸ்பென்ஸ் கல்யாணம்!



குமாரி ஆர். சசிகலா

அதோ அந்த இரண்டு மாடி கொண்ட வீடு அமர்க்களப் பட்டுக் கொண்டிருந்தது. காரணம் அங்கு ஒரு பெரிய இடத்துக் கல்யாணம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. பெண் வீட்டார் மிகுந்த பரபரப்புடன் இங்கும் அங்கும் பம்பரம் போல் சுற்றிச் சுழன்றபடி இருந்தனர். வெளியே நாதஸ்வரக்காரர் காம்போதியை விஸ்தாரமாக ஆலாபனம் செய்து கொண்டிருந்தார். ஏராளமான விருந்தினர் கார்களிலும், மாட்டு வண்டிகளிலும் வந்து குவிந்த வண்ணம் இருந்தார்கள். அவ்வூரிலேயே பெரிய மிராசுதாராகிய சாம்பசிவய்யர் அவர்களின் செல்லப் புத்திரிக்குத்தான் திருமணம் நடந்து கொண்டிருந்தது.

உள்ளே மாடியில் உள்ள ஒரு அறையில் மணப் பெண் இந்திரா தன் அலங்காரங்களையெல்லாம் பூரணமாக முடித்துக் கொண்டு நழுவும் கூறைப் புடவையை ஒரு கையாலும் தலையில் சூட்டியுள்ள மலரை மற்றொரு கையாலும் சரிசெய்து கொண்டே துடிக்கும் இதயத்துடன் கண்ணாடி முன் உட்கார்ந்திருந்தாள். சுற்றிலும் உட்கார்ந்திருந்த அவளது தோழிகளின் வளையல் கலகலப்பைவிட வாய் சலசலப்புத்தான் அதிகமாக இருந்தது.

'முகூர்த்த வேளை நெருங்கி விட்டது; பெண்ணைக் கூட்டிவாருங்கள்' என்று வைதிகர் அவசரப்படுத்தினார்.

மணப் பெண்ணின் தந்தை சாம்பசிவய்யர் மாடிக்கு ஓடி வந்தார். ''அம்மா! குழந்தே! முகூர்த்த நேரம் வந்துவிட்டது. அலங்காரமெல்லாம் ஆயிடுத்தோ இல்லியோ? சீக்கிரம் ஆகட்டும்'' என்று தம் அருமை மகளைத் துரிதப்படுத்தினார். அவர் முன்னால் நடக்க, நாணமும் இடையும் பின்னும் கால்களுமாகத் தன் தோழியர் இருபுறமும் சூழ்ந்து வர அழகு மங்கை மணையை நோக்கி மெல்ல நடந்தாள்.

ஓமப் புகைக்கு நடுவே கம்பீரமாக உட்கார்ந்திருந்தான் சுந்தரம். பெயருக்கேற்ற படியே சுந்தர ரூபமாக இருந்தது அவன் தோற்றம். அவனது அருகில் தந்தச் சிலை போல வந்து அமர்ந்தாள் இந்திரா. அங்கு வந்திருந்த பலர் இருவரின் ஜோடிப் பொருத்தத்தைக் கண்டு வாய் விட்டே விமரிசித்தனர். பெண்ணின் மாமா திருமாங்கல்யத்தைத் தட்டில் வைத்துப் பெரியவர்களிடம் ஆசி வாங்கிக் கொண்டிருந்தார்.

இந்தச் சமயத்தில் மாப்பிள்ளையின் நண்பர் ஒருவர் அங்கு உட்கார்ந்திருப்பவர்களின் கைகளையும், கால்களையும் மிதித்துக் கொண்டு மிக வேகமாக மாப்பிள்ளையை நோக்கி வந்தார். வந்தவர் மாப்பிள்ளையின் காதில் ஏதோ மெதுவாகச் சொல்லவும், அதைக் கேட்ட மாப்பிள்ளையின் முகம் ஒரு விதமாக மாறியது. கம்பீரமான அவன் முகத்தில்

கவலை குடி கொண்டது. அங்கு இருந்த அனைவரும் மாப்பிள்ளையிடம் ஏற்பட்ட மாற்றத்தைக் கவனிக்கத் தவறவில்லை. அவனது கண்கள் மூடப் புகை பட்டுக் கலங்கியதா? இல்லை, நண்பனது செய்தி கேட்டுக் கலங்கியதா என்று அங்கிருந்தவர்களுக்குப் புரியவில்லை. விஷயம் மெதுவாக அங்கிருந்த அவனது நண்பர்களிடமும் பரவியது. அவர்களது முகத்திலும் பரபரப்பும் கவலையும் தென்பட்டன. எவ்வளவு நேரமாகச் சிரித்து, கலாட்டா செய்து கொண்டிருந்த அவர்கள் ஏதோ ஆழ்ந்து சிந்திப்பவர்கள் போல் காணப்பட்டார்கள். சிறிது நேரத்தில் அங்கு ஒரே "குசுகுசு" என்று மாப்பிள்ளையின் நண்பர்கள் ஏதோ முணுமுணுத்தார்கள். இவற்றையெல்லாம் கண்ட சாஸ்திரிகள் மந்திரம் சொல்லுவதை நிறுத்திவிட்டு ஸ்தம்பித்து உட்கார்ந்து விட்டார். நாதஸ்வரக் காரர்களோ காம்போதியைக் காற்றில் பறக்க விட்டுத் தாளம் போடும் பையனை விஷயம் அறிந்துவர உள்ளே அனுப்பினார்கள்.

இந்தப் பரபரப்பு வந்திருந்த உறவினர்களிடமும் பரவ ஆரம்பித்தது. விஷயம் என்னவென்றே தெரியாமல் அவர்கள் ஒருவர் காதை ஒருவர் கடிக்க ஆரம்பித்தார்கள். பெண்கள் கூட்டத்தில் ஒரு பெண்மணி "எனக்கு அப்பொழுதே தெரியுமே! பெண்ணுக்கு அதைச் செய்து போடுகிறேன், இதைச் செய்து போடுகிறேன் என்கிறது. கடைசியில் ஒன்றும் செய்யாமல் ஏமாற்றிக் கல்யாணத்தை முடித்துவிடப் பார்க்கிறது" என்று பெரிதாகச் சத்தம் போட்டாள்.

அங்கு நடக்கும் காட்சிகளையும், மாப்பிள்ளை வீட்டார்கள் கல் மனத்துடன் பேசும் பேச்சுக்களையும் கேட்டுக் கொண்டிருந்த பெண்ணின் தந்தை சாம்பசிவய்யருக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது போலிருந்தது. அவருக்கு ஏதேதோ எண்ணங்கள். "போன வருடம் தன் பெண்ணுக்கு அசட்டுப் பிசட்டென்று காதல் கடிதம் எழுதிவிட்டு ஊரார் கையில் செம்மையாக உதைபட்டுக் கொண்டானே பக்கத்து வீட்டுப் பையன்; அவன் ஏதாவது விஷமத்தனமாக வெடி வைத்திருப்பானோ?" இப்படிப் பலவாக அவர் மனம் எண்ணி எண்ணித் தவித்தது.

மணப் பெண் இந்திராவின் நிலையோ மிகவும் பரிதாபமாக இருந்தது. பொங்கி வரும் அழுகையையும், விம்மலையும் அடக்க முடியாமல் புடவைத் தலைப்பால் வாயை மூடிக் கொண்டாள். அவள் கண்களுக்கு முன்பு ஓடும் ரயிலும், எலி மருந்து விற்கும் வியாபாரிகளும் தோன்றின.

இவ்வளவு கலாட்டாவிலும் விஷயம் என்னவென்று மாப்பிள்ளையிடமோ அல்லது அவனது நண்பர்களிடமோ ஒருவர் கூடக் கேட்கவில்லை! கேட்கவும் துணிவில்லை. நடக்கக்கூடாத விஷயம் ஏதாவது நடந்திருக்கும். எதற்கு நாம் அதைக் கேட்டுப் பொல்லாப்பு அடைய வேண்டும் என்று எண்ணியோ என்னவோ அங்கு கூடியிருந்த உறவினர்கள் அனைவரும் தங்களுக்குள் எதை எதையோ கற்பனை பண்ணிக் கொண்டு அதை மற்றவர்களிடம் பகிர்ந்து கொண்டனர்.





அவ்வளவு நேரமும் செயலற்றுப் போய் அமர்ந்திருந்த மாப்பிள்ளையின் தகப்பனார் மெல்லத் தன் மகனை அணுகி, "என்னடா சுந்தரம், என்ன விஷயம்?" என்று படபடப்புடன் வினவினார். "ஒன்றுமில்லையப்பா! மேற்கிந்தியத் தீவுக்கு கிரிக்கெட் விளையாடச் சென்றிருந்த நம் இந்தியக் கோஷ்டித் தலைவருக்கு மண்டையில் அடிபட்டு ஆபத்தான நிலைமையில் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றிருக்கிறார்களாம். அவர் நிலைமை எப்படியோ என்னவோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறோம்" என்றான் மாப்பிள்ளை சுந்தரம். "ஆமாம் சார்! நல்ல ஆட்டக்காரர்! அவருக்குப் போய் இந்த விபத்து வந்து விட்டதே" என்று விசனத்துடன் ஆமோதித்தார்கள் அவனது நண்பர்கள்.

இதைக் கேட்டதும் வயிற்றில் பால் வார்த்தது போலிருந்தது பெண்ணின் தந்தைக்கு. பெண்கள் கூட்டத்தில் வாய்க்கு ஒன்று குறை சொன்ன பெண்மணிகள் முகத்தில் விளக்கெண்ணெய் வழிந்தது. இந்திராவுக்கோ மாப்பிள்ளை கூறிய வார்த்தைகள் அமிர்தத்தைக் கலைப்பது போலிருந்தது. நீண்ட நிம்மதிப் பெருமூச்சு ஒன்றும் அவளிடமிருந்து வெளிப்பட்டது. வந்திருந்த உறவினர்களிடமிருந்து மீண்டும் கலகலப்பு ஏற்பட்டது. கெட்டி மேளம்... கெட்டி மேளம்! என்று குரல் ஒலிக்கக் கல்யாண வீடு பழையபடி களை கட்டத் தொடங்கியது.

## 9. மகாத்மாவும் முத்துரங்க முதலியாரும்



### முதல் சந்திப்பு

காந்திஜிக்கு மிகப் பிடித்தமான பாடல் ''வைஷ்ணவ ஜனதோ'' என்கிற நர்ஸி மேத்தாவின் கீர்த்தனை. அதில் உண்மை வைஷ்ணவன் யார் என்பது விளக்கப்பட்டிருக்கிறது. அதன்படி வாழ்ந்து வந்தவர் முதலியார்.

1921.ஆம் ஆண்டு எஸ். ஸ்ரீநிவாசய்யங்கார் வீட்டில் காந்திஜியை முதன் முதலாகச் சந்தித்தார். ''பெரும் ஆசார சீலர். ஆனால் தீண்டாமை ஒழிப்பில் இவர் உங்கள் கருத்தையே கொண்டவர்'' என்று ஸ்ரீநிவாசய்யங்கார் காந்திஜிக்கு முதலியாரை அறிமுகப் படுத்தி வைத்தார்.



''நானும் வைஷ்ணவன் தான்; நாம் இருவரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள்'' (Birds of the same feather) என்று காந்திஜி முதலியாரைக் கட்டித் தழுவினார். (தமிழ்நாட்டில் ஆலயப் பிரவேசத்தின்போது முன்னணியில் இருந்தவர் முதலியார்தான். அவர் திருமழிசை, திருநீர்மலை முதலிய கோவில்களின் பாரம்பரை தர்மகர்த்தர். அவரே முன்னால் நின்று ஹரிஜன ஆலயப் பிரவேசத்தை இக்கோவில்களில் நடத்தி வைத்தார்.)

முத்துரங்க முதலியாருடன் திரு பக்த வத்ஸலத்தின் மாமனார் கோபாலசாமி முதலியாரும் காந்திஜியைத் தரிசிக்கச் சென்றிருந்தார். கோபாலசாமி முதலியார் முரட்டுக் கதர்த் துணியால் தலைப்பாகை அணிவது வழக்கம். அதைப் பார்த்த காந்திஜி, ''இவ்வளவு கனத்தை எப்படிச் சுமக்கிறீர்கள்?'' என்று கேட்டார். பின் அவரே சிறிது நேரம் கழித்து, ''நாம் அடிமை நாட்டில்தானே இருக்கிறோம்; இந்தக் கனத்தைச் சுமப்பது அவ்வளவு கஷ்டமா?'' என்று பதிலும் கூறினார்.

## 10. காந்திஜியும் சேலம் தாத்தாவும்

சேலம் விஜயராகவாச்சாரியாருடன் காந்திஜிக்குத் தென்னாப்பிரிக்காவிலிருந்த போதே கடிதம் மூலம் தொடர்பு இருந்து வந்தது. 1915ல் மகாத்மா சென்னை வந்த போது விஜயராகவாச்சாரியார் சேலத்தில் இருந்தார். ஆகவே, முதல் சந்திப்பு ஹிந்து



ஆசிரியர் கஸ்தூரி ரங்க அய்யங்கார் வீட்டில் நடைபெற்றது. அப்பொழுதே ஆச்சாரியாருக்கு அறுபது வயது பூர்த்தியாகி யிருந்தது.

காங்கிரஸ் ஸ்தாபனத்தை ஆரம்பித்ததில் பெரும் பங்கு ஏற்றதுடன் அதன் விதிகளையும் அமைத்தவர் ஆச்சாரியார். ரௌலட் சட்டத்தை எதிர்க்கத் தமக்குக் கனவில் சத்தியாக்கிரக யோசனை ஏற்பட்டதைக் குறித்து காந்திஜி முதன் முதலாக ஆச்சாரியாரைத்தான் சந்தித்து ஆலோசனை கேட்டார்.

''ஒத்துழையாமை இயக்கம் என்று ஆரம்பிப்பதாயின் ஒரு குறிப்பிட்ட கொள்கைகளைக் கண்டிப்பதாக ஏன் இருக்க வேண்டும்? சுயராஜ்யம் இல்லாமல் இருப்பதே மாபெரும் குறை. அதைக் கோரி இந்த இயக்கத்தை ஆரம்பிக்கலாமே?'' என்று விஜயராகவாச்சாரியார் ஆலோசனை கூறினார். காந்திஜி அதையேற்றுக் கொண்டார். தமிழகத்தின் தலைசிறந்த தலைவரும் வயதில் முதிர்ந்த பெரியவருமான விஜயராகவாச்சாரியார் ஆசியுடன் அவரே தலைமை வகித்த (1920) நாகபுரி காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் ஒத்துழையாமை இயக்கம் தீர்மானமாக நிறைவேறி அங்குரார்ப்பணமும் செய்யப்பட்டது.

சேலம் பெரியவர் மறைவு குறித்துக் குறிப்பிடுகையில், ''அவரே ஒரு ஸ்தாபனமாக விளங்கினார். இந்தியப் போராட்டத்தை நடத்திய தலைசிறந்த வீரர். அஹிம்சையில் அவருக்கு அசைக்க முடியாத நம்பிக்கை. முதல் சந்திப்பிலேயே அவரிடம் என்னை இழுத்தது இந்தக் காந்த சக்திதான். அவர் உள்ளத்தில் எனக்கு எப்போதும் ஒரு தனி இடம் இருந்ததை நான் அறிவேன்'' என்று கூறினார் காந்திஜி.

— ''சஜன்''

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon